விருத்தம்:—

உன்னிதமா முளப்படுத்தாட கல்லுன்கு
உற்றகன மூன்ருக வுயி(ய) ர்ந்தகல்லே
அன்னியமாய் நீளமறை—அகலந்தானும்
அவ்வடைவே கனமு முறவதுவேதென்னில்:—
சொன்ன முழந்தனைச் சாணய்த்தொகுத்து மாறித்
தோண்டுகல்லு விரலாமுத்து கையைத்தாக்கி
பின்னிரையில் விர(லா)வாக்கிமூன்று - பெருக்கி
யிவர்க்கீய்ந்து — துகைபேசுவீரே $=$ (36)

என்பது:—

விரித்துக் காட்டல்:—

ய (10) முள நீளத்திலே — ச (4) முளவகலத்திலே க (1) முளக்கனத்திலே - கல் (க$=$1) இதை அறை முளநீளம் அறைமுள அகலம்-(இ$=\frac{1}{2}$) அறை முளக் கனம் — துண்டுபண்ண யெத்தனைத்துண்டு காணுமென்ருல்:—

[ய $=$ 10] முளத்தையுஞ்சாண்படுத்த $=$ (உய) $=$ ($10\times2=20$), (ரண்டுசாண் ஒரு முழம் விதம்) ச (4) முளத்தையுஞ்சாண்படுத்த - அ $=$ ($4\times2=8$) இதனுடனே - உய (20) ஐ மாற - ாசுய ($8\times20=160$)- என்று வைத்து:-

கனம் முளம் - க (1) க்கு சாண் $=$ உ (2) — சாண் - க (1)ரு விறல் $=$ யஉ (12) அூ விறல் $=$ உயச $=$ ($12\times2=24$) இதை முன்னிருத்தின—ாசுய (160)ல் மாற ௩௲அாசய $=$ [ ($160\times24$) $=$ (3840) ] இதனை (க $=1$)ல் மாற-௩௲அாசய $=$ (3840) என்று நிருத்தி :—

நீளம் முளம்-(இ $=\frac{1}{2}$)ரு சாண் (க $=$ 1)ரு விறல் $=$ (யஉ $=$ 12). இதனைக் கல்முளம் (இ $=\frac{1}{2}$)ரு சாண் (க $=$ 1)ல் மாற—(யஉ $=$ 12). இதனை முன்னிறுத்தின — ௩௲அாசய (3840)க்குக் குடிக்க ஈய்வ $=$ [ (௩ாஉய) $=\left(\frac{3840}{12}\right)=$ (320) ]. என்பது.

முந்திரி முதலாய் ஒன்றின்வறை துகை மொளிய வென்னில்:—

விருத்தம் :—

வந்திடு மொன்றே முன்னி
திருவதாய் வருத்துதற்கே
சுந்தரமாகரற்றினச்
சுருக்கத்தைப் பெருக்கிமானே—
சிந்த முந்திரியில் வைத்தே
செப்புநீ இவை கடனே $=$ (37)

ஙூ (முந்திறி) முதலாய்-க-வறைக்கும் (முந்திறி முதல் ஒன்று வறைக்கும் $= \frac{1}{320}$ முதல் 1 வறை) யெத்தனை யென்னில் :—

(க)ரு-ஙூ-கூஉயி (ஒன்றுக்கு முந்திறி யென்பது முன்னூற்றிறுபத்தில் ஓர் பங்கு அதாவது இதன் $= \frac{1}{320}$). செற்றினச் சுநக்கந் தாக்க-ருயி-க-சு —கூசுயி- இதை - ஙூ-ல் கழிக்க — ௱சுயி - இ - ∴ ஙூ-முதல்-க-வறைக்குந் துகை- ௱சுயி இ $= (160\frac{1}{2})$ என்பது:—

கட்டளைக் கலிப்பா :—

ஒரு பத்தே யடி ஓடி பின்னுறினிலுற்ற
மீளுங் குதிறைக்கே தான் விலை—
தருவரஞ்சுபொன்—னெட்டடியோடியே
தருகியஞ் சடிமீள பரிக் கேத்தபொன்-
(வளுத்துவதே தனில் முன்மொழி செண்டொன்றாய்
வைத்த பின்னு(தா)தம்படியாகவே அருமையாம்)
பொன்னுடன் மாறி முன்னவர்க்
காணுமீய்வை யறைந்திடவேணுமே $= (38)$

யி (10) அடி ஓடி—சு (6) அடி மீளுகிற குதிரைக்கி விலை ரு பொன் $=$(5 பொன்) ஆ - அ (8) அடி ஓடி—ரு (5) அடி மீளுகிற குதிறைக்கி எத்தனை பொன்னென்னில் :—

யி (10)ட்—சு (6)ம்—யிசு (16) என்று நிருத்தி—பின்—அ (8)ம்—ரு (5)ம்—யிங $=$(13). இதை அஞ்சு (5) பொன்னாகிய—$(5 \times 10) = (50) =$ ருயி-ல் மாற சுரு௱ருயி $(13 \times 50 = 650)$. இதை முன்னிறுத்தின – யிசு (16)ருக்குக் குடுக்க ஈய்வு சயிஇஅ $(= \frac{650}{16} = 40\ \frac{5}{8})$ ஆதலால் நாற்பதரையேயிக்கால் [(சயிஇஅ $= (40 + \frac{1}{2} + \frac{1}{8}) = (40\frac{5}{8})$] பொன் என்பது:—

விருத்தம்:—

கந்தகம் வெந்தணலாயம் கருது நூத்திருவதுக்கே
வந்தமொருபலமதாக மருபடியடி சாலத்தந்திடும்—
படியொ(யோ)றைந்து-தாத்திராலண்று (திராலான்று)
மூன்று-உந்திய நலமுமேழு (வொ) மொன்பது
மென்பதாமே— (39)

கொச்சகம்:—

நாலொன்ம (ப) தாங் குன்றி
நவிலுமதி னவ்வளவும்—எலுவையிற்பாதி
ஏற்றந்த பாதியனுகூல
முன்னுறைத்த குரு
(க)கொன்றுமே கூடச்சா(ல்)லு
நூருனதென்று சாத்தியது மெய்யாமே $=$ (40)

வெண்பா:—

பத்துமதிளுடையப் பார்வேத்தன் கோட்டைக்கி
வைத்தமதிளிடை (யி) லே வாசலாம்—
அத்திநீர்—உண்ணும் போதேகில்-
(ஒன்று) ஒண்ணுமுதல்ப்
பத்தளவு மென்று
நீரே மாண்டிருந்து = (41) என்றது.

முதல் வாசல்வறைக்கும் யானை-உகூறாஉ0 (2520) என்பது—

வெண்பா:—

கன்னல்மொளி ஒன்பான்காசு துவமேயாகத்
தின்னவர்கள (ளெ) ன்னவிலே செப்பமே—
கன்னல்மொளி (ஒரொன்பதென்பதின் படியடி)
த்துகையதற்கே - ஒரொன்பதை ஈய்ந்துறை = (42)

என்பது.—

க (1) முதல் கூ (9) வரைக்கும் படியடித்துகை—சாரு = (45) – இதற்கு - கூ (9) குடுக்க ஈய்வு (சாடு $=\frac{9}{45}=\frac{1}{5}$) ஆதலால்:—

கொளுத்தாடைக்கி [அ = (8) = ?] தண்டுத்த (அதனடுத்த) மொளிக்கி— இந்தப்படி பொளி (ழி) க்கு மொளி - சாடு ($=\frac{1}{5}$) அதியப் (அதிகம்) கூட்ட கூ·கூ (9—9) சரி :—

விருத்தம்:—

நூருடனூரைமாரை(ற)னுவன்றிடு நூறுக்கிகதான்-
கூறியதானமூன்றாய் கொண்டிருவரைக்கும்-
ஆரினிலொன்று நீக்கலஞ்சு முன்னதுவைமாறித் தெரிய
வஞ்சுத்தானம் செப்பிடிற் குளிப்பத(மா)மே = (43)

என்பது:—

ள ரு ள எத்தினை (=100×100=?) யென்னில்:— க - ய-ள - ஆறு தானம் - ௩ (3); மத்த நூறுக்குத் தானம் - ௩ (3) – ஆறு த்தானம் - ௬ (6) - க (1) போக - நீ ருத்தானம் - ௫ (5) - நிருத்தி ள.ரு இனம் - க = (1), மற்ற நூருக்கும் இனம் (க-) = (1); மாற – க - க - இதை நிருத்தி ௫ (5) மட்டும் நடத்த:—

— க - ய - ள - ௲ - ய௲ - ஆதலால்:--
ள ரு ள: ய ௲ = (100×100=10000) என்பது—

தாளிசை:—

நாலஞ்சனில்மாகாணி இவற்தெ (இவற்றை) வருலக்கம்—
நவமாகவேதன்னை - மாருவா நவியாவண
மிந்தக்கோல்(ெ)சரி - வீசந்தன்னை—
மேல்கொண்டது சரியாய்க் குணமாமிருபத்துமே—
யதிலித்த வாக(வே)தாக்கி
யாவருசரிவளிமாதை
முன்னறிவாகிய வீசத்தைங்கா லொருவகை யென்று
கையன்றிமேலஞ் ஞலெனத்தாறெரு—
வீசந்தனைமாறி வேண்டுந்துகை ஒன்றுகவே—
விளத் (விள்ளத்) துணிவீரே— **(44)**—

என்பது;—

மகாஹதாஸ ரு மகாஹதாஸ குழி = ($19\frac{15}{16} \times 19\frac{15}{16}$ ரு. குழி) யெத்தனை யென்றால்:- மகாஹதாஸ ($19\frac{15}{16}$) யுடனே ய ($\frac{1}{16}$) கூட்ட— உம [($19\frac{15}{16}+\frac{1}{16}$) = (**20**)] உம. ரு உம: சா = ($20 \times 20 = 400$)—ல் உம. ஆ: உஇ = ($20 \times \frac{1}{8} = 2\frac{1}{2}$ தள்ளி ய. ரு. ய: வுதகீவ =($\frac{1}{16} \times \frac{1}{16} = \frac{1}{256}$) கூட்டி. ஙாகுமன இ வுதகீவ $= [(397 + \frac{1}{2} + \frac{1}{320} + \frac{1}{1280}) = \left\{(397) + \frac{(640+4+1) = (645)}{1280}\right\}$ $= (397+\frac{129}{256}) = (397\frac{129}{256})]$ என்பது.—

—(வேறு)—

கட்டளைக்கலிப்பா:—

**வட்டமான நிலம் அளக்கும் வகைக்கு :— விபரம் :—**

வட்டமனை நிலமளக்கும் வகை வளு(மூ)த்துவேன்
காணிக்கா ? முன்னுகவே தொட்ட கோலொரு
நூறுடனன் பதா (150)ய்த் தொகுத்த
**கோலஞ்சு வீச** ($\frac{5}{16}$ = **ஐவீச**)த்துளாக்கியே
இஷ்டமாகத்தனைத்தன்னில் மாறியே
யெத்த மாங்குளி இன்னவை யென்று தான்
சட்டமாயுறை **வட்டமும் விட்டமே**
சாற்று மூன்றெருறைல் மாவை யெண்ணியே = (45)

**ஞ. மூன்றெருனுல் மா** $= [\left(\frac{16}{5}\right) = (3 + \frac{1}{5}) = (3\frac{1}{5}) = (3\frac{2}{10}) = (3{\cdot}2)]$

என்பது :—

வட்டமான நில மளக்குமிடத்தில் வட்டச் சுத்தளவு = ாடுல் ( = 150) இதை விட்டம் பண்ண — (வ ய) = ($\frac{5}{16}$) வாயில் கழிக்க — [ (ச ம சு த ஷ) = ($46\frac{7}{8}$)] = **நாற்பத்தாரே முக்காலேரிக்கால்**) = [($150 \times \frac{5}{16}$) = ($46\frac{7}{8}$)] இதைத்தன்னில் மாற — உகுாகுமன வஉவுத = [ ($2197+\frac{1}{4}+\frac{1}{80}+\frac{1}{320}$) $= 2197 + \frac{(80 + 4 + 1 = 85)}{320} = 2197 + (\frac{17}{64}) ] = [46\frac{7}{8} \times 46\frac{7}{8}) =$ $\left(\frac{140625}{64}\right) = ($ஞ $= 2197\frac{17}{64})$ ] இதை—ப—( = $\frac{1}{16}$) வாயில் கழிக்க —

ரகூயின வயதுவது $= [\,(2197\tfrac{17}{64})\,(\tfrac{1}{16})\,] = [\,(\tfrac{1}{16} \times 2197) + (\tfrac{17}{64} \times \tfrac{1}{16})\,]$
$= [\,(137\tfrac{5}{16} + \tfrac{17}{1024}) = (137 + \tfrac{5}{16} + \tfrac{17}{1024})\,] = [\,(137) +$
$+ \left\{\dfrac{(320 + 17) = (337)}{1024}\right\}\,] = [\,(137\tfrac{337}{1024})\,] =$ ௐ $[\,(137) +$
$(\tfrac{1}{4} + \tfrac{1}{16} + \tfrac{1}{80} + \tfrac{1}{320})\,] = [(137) + \left\{\dfrac{(80+20+4+1)=(105)}{320}\right\}$
$= \left\{(137) + (\tfrac{105}{320} = \tfrac{21}{64})\right\} = 137\tfrac{21}{64} = (137\tfrac{337}{1024} = 137\tfrac{21}{64})$
$= (137{\cdot}328125)$

| | | |
|---|---|---|
| $(\tfrac{21}{64}) =$ | $(0{\cdot}328125)$ | நபம் வித்யாசம் பலம்சமமே |
| $(\tfrac{337}{1024}) =$ | $(0{\cdot}328125)$ | |

$\therefore\ [\,137\tfrac{21}{64} = 137\tfrac{337}{1024}\,]$

இதை வது $(\tfrac{1}{320})$ வாயில் களிக்க — வ ௱ சு வது கீ வயது வது =
$[\,(\tfrac{1}{4} + \tfrac{3}{20} + \tfrac{1}{40} + \tfrac{1}{320} + \tfrac{1}{1280} + \tfrac{1}{5120} + \tfrac{1}{25600} + \tfrac{1}{102400})$
$= \dfrac{(25600 + 15360 + 2560 + 320 + 80 + 20 + 4 + 1)}{102400} = \tfrac{43945}{102400}$

$$= \left(\frac{8789}{20480}\right) = \left\{\frac{1}{2{\cdot}330185\frac{4035}{8789}}\right\} = (\mathbf{A}).$$

என்றுகின்றது:—.

கேவலம் தமிழ் லக்க (பின்ன) மின்றியே கணிதத்தை நேர்நடத்த:—

$$150 \times \frac{5}{16} = \frac{750}{16} = \frac{375}{8}.$$

$$\left(\frac{375}{8}\right)^2 = \left(\frac{140625}{64}\right) = 2197\tfrac{17}{64}$$

$$\frac{140625}{64} \times \tfrac{1}{16} = \frac{140625}{1024} = 137\tfrac{337}{1024}.$$

$$\left(\frac{140625}{1024} \times \tfrac{1}{320}\right) = \left(\frac{140625}{1024 \times 320}\right) = \left(\frac{140625}{327680}\right) = \left(\frac{28125}{65536}\right);$$

$$\left(\frac{28125}{65536}\right) = \left\{\frac{1}{2.33017\left(\frac{-3125}{28125}\right)}\right\}$$ $=(\mathrm{B})$ என்றுகிறது.

ஆதலால் இங்கு மேலே காட்டிய (A) க்கும் (B) க்கும் உள்ள தாரதம்ய
கணப்புத்திமான்கள் அவசியம் ஆலோசிக்க வேண்டியதாகும்]—

ஆதலால்:— வட்டம் - ௩௰௨ - ரூ வ ௰ சு வுக ௯ வ ய ௩ ஐ - ரூ - விட்டம் - ௰ (10) ரு வட்டம் யெத்தனை யென்னில்:— ௩சுபு ($=3\frac{1}{5}$)ல் பெருக்கி-௩௰௨ =

$$\left(32 = 10 \times 3\tfrac{1}{5} = 10 \times \frac{16}{5} = \frac{160}{5}\right)$$ என்று சொல்வது.

---

இனி இந்த வட்டமனை வட்டகிலம் அளக்கும் வகையில் சம்மந்தப்பட சில முக்கிய விசேஷங்களைக் கீழ்விளக்கும் விவரணத்தில் காண்க:—

இந்தக் கணிதப் புத்தகக்ர்த்தாவால் சமவட்டத்தைக் கொள்ள வேண்டியதற்கு:—

விட்டம் என்கிற குறுக்களவு 5 (ஐந்து) ஆகில் இதற்குறியச் சப (ச்சுற்று) வட்டம்16 (பதினாறு என்றபடிக் கமைந்திருக்கிறது. இவர் சம்மதப்படிக்கு.



படம் = (1)

ஆகையால் தான் முன்னேயே விட்டம்—௰ (10) ஆனால் வட்டம் - ௩௰௨ (32) என்று கூறி இருக்கிறார். உதாரணங் கவனிக்க இது புலப்படும். $\frac{32}{10} = 3{\cdot}2 =$ ௩சுபு இதனால் விட்டம் - 1க்கு வட்டம் மூன்றுடன் கூடிய நாலுமா என்பதை நன்கு விளக்குகிறார் உதாரணத்தில்.

($\therefore$ நாலுமா = சுபு = $\frac{1}{5}$ = $\therefore 3 + \frac{1}{5} = 3\frac{1}{5} = 3{\cdot}2$ என்பது.)

முதலில் கோடுகளைப்பற்றிய வரையில் கவனிக்க வேண்டியவைகளாவன:—

இந்தக்கணிதக்கர்த்தாவால் க்ஷேத்ர (நில) விஸ்தாரத்தை (விசாலத்தை = குழியை) ப்பற்றி வெகுவிஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது, கணித மார்க்கத்தில் இதற்குப் பற்பல உதாரணங்களுங் காட்டியிருக்கிறார். நீண்ட சதுரச்சம்பந்தமாகவும், சமச்சதுரச்சம்பந்தமாகவும், இவ்வித விசாலங்கள் அடியோடில்லாமல் கேவலம் தீர்க்கமாக இருக்கும் க்ஷேத்ரத்தைத்தான் கோடு (ரேகை) என்று சொல்வது உலக இயல்பு. இந்த ரேகைகள் இருவிதப்படும். ஸமமென்றும், வக்ரமென்றும்: ஸமமென்றால் நேராகப் போவதும், வக்ரமென்றால் (கோணலாக) வளைந்து போவதுமாம்.

நேராகப் போகுங் கோட்டைச்சார்ந்தவைகளே ஸமக்ஷேத்ரங்களும், விஷமக்ஷேத்ரங்களும்: இதற்குள் முக்கோண க்ஷேத்ரம்முதல் பல கோண க்ஷேத்ரங்கள் பர்யந்தம் இஷ்டப்படிக்கு அடங்குகின்றன.

வக்ரமாக (கோணலாக) போகுங் கோட்டை யனுசரித்ததுத்தான் வட்டமனை, வட்டகிலம் முதலிய விருத்தக்ஷேத்ரங்கள், இந்த வட்டத்தில் நீண்ட வட்டமென்றும், பூர்ணச்சம வட்ட மென்றும், அறை முதலிய பலவித வட்டங்கள் உருவத்தில் வெவ்வேறு விதமாக நம்மால் காணப்படுகின்றது. துறவுகள்; வண்டிச்சக்கரம், பந்து முதலிய; வட்ட (கோல) இனத்தைச் சேர்ந்தவைகளே.

இந்த வட்டசப்பந்தமான விசாரங்கள், பூர்வகாலத்திலிருந்தே வெகு சூக்ஷ்மமாக; ஆர்யபட்டர், வராகமிகிரர் - சூரியன் வியாஸர் வஸிஷ்டர் - பாராசரர்முதலிய மகான்களால் தொன்று தொட்டு நன்கு விளக்கப்பட்டு வருகிறது:

இவர்களால் விட்டம் - (20000) ஆனல் வட்டம் (62832) என்று நிச்சயிக்கப் பட்டிருக்கிறது.

இவர்கட்கு விரோதமாக ஸ்ரீதரர் முதலிய கணித பண்டிதர்கள் விட்டம் ஒன்றானல் இதற்குச் சுற்றளவாகிய வட்டம் பத்தின்வர்க்கமூலம் $\sqrt{(10)}$ என்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| (10ன் வர்க்கமூலம்) = $\sqrt{(10)}$ | = | 3·1623 |
| ஆர்யபட்டாதியர் வட்டம் | = | 3·1416 |
| இவற்றின் வித்தியாசம் | = | 0·0207 |

(இந்தக் கணிதகர்த்தாவின் ஒன்றான விட்டத்தின் வட்டப் பரிமாணம்) = 3·2000

இப்படிப் பூர்விகர்கள் காலத்திலேயே விட்டத்துக்குறிய வட்டத்தைப் பல வித்யாசத்தோடு வழங்கிக் கொண்டார்கள். ஆனபோதிலும் கணிதப்புலவரான - பாஸ்கரர் முதலியவர்களால் விட்டம்-1-ரு வட்டம் (3·1416) என்றே அங்கிகரிக்கப் பட்டிருக்கிறது. இந்த ($\pi$ = 3·1416)ஐ யனுசரித்தே நவீனர்களின் கணிதங்களும் லாகரிதும் முதலிய நவீன அளவு முறைப்படிக்கு சூக்ஷ்மமாகச் சாதனஞ் செய்யப்பட்ட ஓர் விட்ட வட்டம் = (3·14159265358979 32) = $\pi$.

இந்த விகித சாப்யத்தைக் கொண்டே த்ரிகோணமிதி முதலிய-வான கணித உபகரண கணிதங்களையும் நடத்திவருகிறார்கள். (கோலகணிதத்துக்கோ இந்த க்ஷே $\pi$ தான் மூலாதாரமாகும். இதுவின்றியங்கு, ஏதும் நிகழ்த்தவே முடியாது)— த்ரிகோணமிதியிலும் ஸமல (ப்லேன்) த்ரிகோணமிதி, சாப (ஸ்பெரிகல்) த்ரிகோண மிதி யென்று இருவிதம். இவைகட்குறிய கணித உபகரணங்கள்.

(1) புஜஜ்யா = ஸைன் (SINE)
(2) கோடிஜ்யா = காஸ் (COSINE)
(3) உத்க்ரமஜ்யா = வர்ஸ் (VERSEDSINE)
(4) கோட்யுத்க்ரமஜ்யா = குவர்ஸ் (COVERSEDSINE)
(5) ஸ்பர்சரேகா = டான்ஜென்டஸ் (TANJENT)
(6) கோடிஸ்பர்சரேகா = கோடான்ஜென்ட (COTANJENT)
(7) ஸ்பர்சகர்ணம் = ஸீக்கன்ட் (SECANT)
(8) கோடிஸ்பர்ச கர்ணம் = குஸீக்கன்ட் (COSECANT)
(9) புஜஜ்யோஜ்யாகர்ணம் = கார்டு (CHORD)
(10) கோடிஜ்யோஜயாகர்ணம் = குகார்டு (COCHORD)
(11) புஜ; கோடி; கர்ண; கோலஸந்தி = வர்ட்டக்ஸ் (VERTEX)

என இப்படிப்பல அவயவங்களுள்ளவைகளாக இருக்கின்றன—.

எப்போ ஓர் கர்ணம் ஏர்படுகிறதோ இதாகிற அறை விட்டத்தையுடைய ஓர் வட்டம் அவசியம் ஏற்பட்டேயிருக்கும். கர்ணமேற்பட்டபோது புஜகோடிகளு மிருக்க வேண்டியதாகிறது. இம்மூன்றவயவங்களும் தெரியும்போது இவை களின் பரஸ்பர ஸம்பாத, ஸம்முக, கோணங்களும் உண்டாகின்றன. ஆனால் இவைகளில் சில தெரிந்தவைகளும், சில தெரியவேண்டியவைகளுமாகவே இருக் கும். இதற்காகவேதான் ஸகலகணிதப்ரபஞ்சமும்.

---

மேற் கூறிய உபகரணங்கள் கேவல ஸால க்ஷேத்ர ரூபமான ஜ்யாமிதியில் அமையும் போது அந்த ஜ்யா முதலிய சப்தங்கள் போய்-கேவலம்-புஜம், கோடி, கர்ணம், ஸம்பாத, ஸம்முககோணம், என்ற இவைகள்தான் பெயர்கள் உடைய வைகளாக நிற்கின்றது. இந்தக் கோடுகளை அனுசரித்தே இதுவரையில் கிரந்த கர்த்தா கூறிவந்த நில அளவை வட்டம் முதலிய கணித விகிதங்களும்.

இப்படிக் கண்ட கோடுகளின் ஒரு பக்கக்கோடு புஜமும் இதற்கெதிர்க் கோடு கோடியும், இவ்விரு நுனிகளின் ஸம்பாத சேர்க்கைக்கோடு கர்ணமும், ஆக அழைக்கப்படுகிறது.

இப்படத்தில் கண்ட AC = புஜம், AB = கோடி BC = கர்ணம், எனப்படும். எப்போதும் புஜகோடி களை விடக் கர்ணம் நீண்டும், கர்ணத்தை விடக் (கோடி புஜக்கூடல்கள் (கோடி + புஜம்) அதிகமாகவே இருக்க வேண்டியதாகின்றது நிபந்தனையே — இல்லை யேல் உருவமமைவதில்லை.) ∴ (கோடி + புஜம்) > கர்ணம்.



(படம் = 2)

இவ்வித உருவைச் சார்ந்த சில விசேஷ கணி தங்களை (இந்தக் கணிதக்கர்த்தாவால் விடப்பட்ட சில விசேஷங்களை), வட்டச் சம்பந்தமான கணிதம் முடிந்த பின்பு கூடியவரையில் வெகு சுருக்கமாகக் கூறுவோம். இவைகளில் விசேஷங் கள் வெகுவாயுள்ளன மாத்திரம் கணிதத்தில் காட்டப்படுகிறது.—

நூதனக்கணித அளவுமுறைப்படிக்கு லாகரிதும் (காதாங்கம் = லகுரிக்தம்) முதலியவைகளால் நவீனர்கள் ஏற்படுத்தப்பட்ட (π)யின் விகிதம் (3·1415926535897932) என்கிறபடிக்காகும்.

விருத்தார்யபட்டால் செய்யப்பட்டதும் பௌருஷக்கிரந் தங்கட்கே முதலாவதுமான நான்கு பாதங்களைக்கொண்ட ஆர்யபட்டீயம் என்கிற மூலக்ரந்தத்துக்கு ஒருவர் (வியாக்கியானம்) வெகு விமர்சன விஸ்தாரமுள்ள உறை செய்திருக்கிறார்.

இப்புத்தகத்தின் காப்பிதற்சமயம்: அடையார் அனிபெஸண்ட் லைப்ரரியில் தெலுங்கெழுத்தில் ஸம்ஸ்க்ருத பாஷையில் ஓர் காப்பியும், தேவநாகரியில் ஸம்ஸ் க்ருத பாஷையில் ஓர் காப்பியும் ஆக இரண்டு காப்பிகள் இருக்கின்றன—முதலில் சொன்னது சிதிலமாயிருப்பதால் இரண்டாவதைப் புதிதாகக் காப்பியும் எடுக்கப் பட்டிருக்கிறது. (அதில், உள்ள ஸம்ஸ்க்ருத பாஷைக்கு நேர் செய்த தமிழ்)

—அந்த உரைக்கு **பாஷ்யம்** என்கிறபெயர்—இதற்குக் கர்த்தா "நீலகண்ட ஸோம ஸுத்வா" என்கிற பேருடையார். இவர், திருக்கணித கர்த்தாவும் ஆர்யபட்டீய மற்றோர்வ்யாக்யான மாகிய படதீபிகா கர்த்தாவுமான ஸ்ரீபரமேசவருசார்யர் தனயன்; தாமோதரபண்டிதரின் சிஷ்யர், ஸ்ரீ குண்டம் என்கிற கிராமத்தில் வஸித்தவர். கார்க்யகோத்திரத்தில் பிறந்தவர், இவர் காலம் சுமார் A. D. (1450 to 1550) இந்த நீலகண்ட ஸோமஸுத்வா என்பவர் சொல்லுகிறார் :—

ஸங்கம கிராமத்திலிருந்வருகிய "மாதவன்" என்பவர் மிக்க சூக்ஷ்மத்துக்குச் சமீபமாயிருக்குந்தன்மை வாய்ந்த "**பரிதி**" (சுற்றளவைச்) சொல்லுகிறார் என்கிறார்:—

அப்படி அந்த மாதவன் என்பவர் சொல்லும் பரிதியளவோவென்றால்:—

இங்கு வ்யாஸம் = நவநிகர்வம். இதற்குச் சமம் = (900000000000) ஆகும், இதற்குப்பரிதி என்கிற சுற்றளவுக்குச் சமம் = (2827433388233) இதுவாகும் $\left(\frac{\text{பரிதி}}{\text{வ்யாஸ}}\right) = \left[\frac{\text{வட்டம்}}{\text{விட்டம்}}\right] = \left\{ \text{ஷை } \frac{2827433388233}{900000000000} \right\} = \pi =$ (பையளவு) $= (3{\cdot}14159265359\tfrac{2}{9})$. இவ்விதம்; நீலகண்ட ஸோமஸுத்வா சொல்லிய மாதவன் என்பவர்; பண்டிதர்கள் ஷை யளவுப்படி சொல்லுகிறார்கள் என்கிறார்.

நீலகண்ட ஸோம ஸுத்வா காலம் = (AD-1450 to 1550) இதற்கு முன் மாதவ பண்டிதர் காலம் எப்போ என்பது தெரியவில்லை இவருக்குபதேசித்த மூலபந்யத்துக் குறிய கர்த்தாவும் எந்த காலத்தில் என்று விளங்கவில்லை. ஆகையால் (ஷை $\pi = 3{\cdot}14159265359\tfrac{2}{9}$.) என்பது. ஆர்யபட்டர்காலம் (AD = 500) இதற்குப் பிறகு (AD = **1500**) இதற்கு முந்தியுள்ள காலத்தில் ஏற்பட்டிருக்க வேண்டும். இந்த மத்தியிலுள்ள (1000) ஆயிரம் வருஷத்தில் வெகு கணித ஸமர்த்தர்கள் இருந்திருக் கிறார்களிங்கு என்று ஏற்படுகின்றது.

இதனால் :—

ஆர்யபடர் ; வராஹமிஹிரர் முதலியோர் காலத்திய விட்டத் துறியவட்டம் $= \frac{62832}{20000} = \frac{3{\cdot}1416}{1{\cdot}0000}$, $= (\pi)$ என்றும், இதற்குப் பிந்தி (அதாவது AD = 500 to 1500) ஆகிய, இந்தக் காலத்தில் :—

$$\pi = \left(\frac{2827433388233}{900000000000}\right) = \left\{\frac{(3{\cdot}14159265359\tfrac{2}{9})}{(1{\cdot}000000000000)}\right\}$$

$= (3{\cdot}14159265359\tfrac{2}{9})$ என்றும் ஏற்படுகிறது:—

சுமார் (AD 1550)க்குப் பிந்தி மேல் நாட்டார் கீழ் நாட்டார் முதலிய பல நவீனர்களால் நவீனகணித அளவு முறைகளைக் கொண்டும் ஷை $(\pi)$யை இவர்கள் :—

$\pi = 3.1415926535897932 \ldots\ldots\ldots \rightarrow \ldots$ என்கிறார்கள் :— இவர்கள் சம்மதப்படி ஷெக்கு ஸ்தானம் இவ்வளவுதானு இன்னும் மேலு முண்டா என்றால்:— இதனுடைய ஸ்தானத்துக்கு முடிவான அளவே கிடையாது. (———→) இவ்விதக் குறியிருந்தால் முடிவின்றிச் செல்வதையே காட்டும்.

இங்கே ஷெ ($\pi = 3{\cdot}1415926535897932 \rightarrow$) ஐ இதற்கு மேலும் சொல்லாமல் ஏனிங்கு இதுபர்யந்தம் நிருத்தினுய் என்று கேள்வியும் எழும்புகிறது. இதற்குத் தக்கச் சமாதானம் யாதென்றால்:—

ஆர்பட்டாதியர் சம்மத ஒரு விட்ட வட்டம் $= 3{\cdot}1416$
ஸ்ரீதாாதியர் சம்மத ஒரு விட்ட வட்டம் $= 3{\cdot}16228$

ஷெ இரு மதங்களின் வித்யாஸம் $= 0{\cdot}0207$

இக்கோலாகலக்கர்த்தாவின் சம்மதப்படிக்கோ ஒரு விட்டதின் வட்டம் $= 3{\cdot}2$ என்பது. இவைகள் ஒவ்வொன்றும் ஒன்றுக்கொன்று வித்யாஸமாக இருப்பது போலவே நவீனர்களுக்கு வெகு சம்மதமாக இருக்கும் இந்த $\pi = (3{\cdot}1415926535897932 \longrightarrow) = 180^\circ$க்கு ; இவ்வித மேற்பட்டதற்கும் கணித மூலமுண்டு. இதன் பலவிகித விவரணம் சுருக்கமாகக் காட்டப்படுகிறது.

MACHIN (மேஷின்) மதப்படி கற்பனை

அதாவது:—

$\because (4$ ஸ்ப$^{-1}\,\frac{1}{5} -$ ஸ்ப$^{-1}\,\frac{1}{239}) = \frac{\pi}{4}$ இதற்கு லாகரிதும் படிக்கு

ஏற்படுஞ் சமீகரண ஸூத்ரம்:—

இங்கு $(\frac{1}{5} = \frac{2}{10})$ எனக் கொண்டால்:—

$$\left[16 \left\{ \frac{1}{1}\left(\frac{2}{10}\right)^1 - \frac{1}{3}\left(\frac{2}{10}\right)^3 + \frac{1}{5}\left(\frac{2}{10}\right)^5 - \frac{1}{7}\left(\frac{2}{10}\right)^7 + \frac{1}{9}\left(\frac{2}{10}\right)^9 - + - + \longrightarrow \right\} \right.$$
$$\left. (-4)\left\{ \left(\frac{1}{239}\right) - \frac{1}{3}\left(\frac{1}{239}\right)^3 + \frac{1}{5}\left(\frac{1}{239}\right)^5 - \frac{1}{7}\left(\frac{1}{239}\right)^7 + - + \longrightarrow \right\} \right]$$

இங்கு வந்தஸர்வதன எண் $= 3{\cdot}201025 \ldots$
,, ,, ,, ருண எண் $= -{\cdot}059433 \ldots$

ஷெ இரண்டின் வித்யாஸம் $= 3{\cdot}141592 \ldots \rightarrow = \pi = 180^\circ$க்கு.

இவ்விதம் (டான் $30^\circ) = 57735 = (\frac{1}{3})^{\frac{1}{2}}$ இதையும் லாகரிதும் படி ஸூத்ர ஸமீகரணஞ் செய்ய:—

$$\left\{ \left[\frac{1}{1}\left(\frac{1}{3}\right)^{\frac{1}{2}}\right]^1 - \left[\frac{1}{3}\left(\frac{1}{3}\right)^{\frac{1}{2}}\right]^3 + \left[\frac{1}{5}\left(\frac{1}{3}\right)^{\frac{1}{2}}\right]^5 - \left[\frac{1}{7}\left(\frac{1}{3}\right)^{\frac{1}{2}}\right]^7 + - + - + \rightarrow \right\} = \frac{\pi}{6} = 30^\circ$$

$\therefore \pi = (6 \times 0{\cdot}5235988) = 3{\cdot}1415928 \ldots \rightarrow = 180^\circ$

மேலே காட்டிய இருவித வழிப்படிக்கும் ($\pi = 3{\cdot}14159 \ldots \rightarrow$)ஐ சில ஸ்தான பர்யந்தம் கணிதம் செய்ய ($3{\cdot}1415926575897932 \ldots \rightarrow$) என்றேற்

படுகிறது. இதற்கு மேல் ஷை இருவித வழிகளின் விடைகளுந் தாரதம்ய மடைகின்றது. (கணிதவிஸ்தாரபயத்தால் அவ்வளவு பர்யந்தம் கணிக்காமல் மூலவழியை மாத்திரமிங்கே காட்டியது.) அவ்வித வித்யாஸ மறிய ஆசை உள்ள வர்கள் மேற்காட்டிய வழிப்படி கேவலவ்யக்த்த கணிதத்தால் ஷை. வித்யா ஸத்தைத் தெரிந்து கொள்ளலாம். இதன் பேச்சிங்கு வந்ததன் காரணம்:— பூர்வீகர்கள் காலத்தில், விட்டத்தின்வட்டவித்யாசம் எவ்விதம் முன்காட்டியபடிக் கேற்பட்டதோ மதபேதத்தால்; அவ்விதமே இக்காலத்திலும் நவீன முறைபடி காட்டிய இருவித வழியையும் பின்பற்றியவர்களுக்கு பலத்தின் (விடையின்) வித்யாஸத்தால் மதபேதம் உண்டாகின்றது. இந்த இரண்டாம் வழிபடிக் கேற்படும் வித்யாஸத்தைக் கண்டு பிடித்துக் கூறியது முதலில் நான்தான். இது சுமார் (**AD = 1940**ல்) என்னல் கண்டறியப்பட்டதாகும்.

இந்த ($\pi$) பரிமாணம்-கணிக்க மூன்றும் வழியுமுண்டு:—

கேவலம் புஜஜ்யா (ஸைன் $\theta$) விலிருந்தே லாகரிதும்படி கண்டறியப் படுகின்றதாகும்:—

இங்கு (ச) = ஸை $30^0 = \frac{1}{2}$ ஆனல்:—

$$\pi = 6\left\{ச + \frac{1}{2}\cdot\frac{ச^3}{3} + \frac{1\cdot3}{2\cdot4}\cdot\frac{ச^5}{5} + \frac{1\cdot3\cdot5}{2\cdot4\cdot6}\cdot\frac{ச^7}{7} + \frac{1\cdot3\cdot5\cdot7}{2\cdot4\cdot6\cdot8}\cdot\frac{ச^9}{9}\cdots\rightarrow\right\}$$

இங்கு:— ச = $\frac{1}{2}$ = ஸை $30^0$க்கு

$$\therefore \frac{\pi}{6} = \left\{\frac{1}{2} + \frac{1}{2\cdot3\cdot2} + \frac{1\cdot3}{2\cdot4\cdot5\cdot2} + \frac{1\cdot3\cdot5}{2\cdot4\cdot6\cdot7\cdot2} + \ldots\rightarrow\right\}$$

$$\therefore \frac{\pi}{6} \times 6 = \pi = (3\cdot14159265\ \ldots\ldots\rightarrow)$$ம் வரும்.

**இதுபோல் ஷை $\pi$ ஐக் கணிக்க இன்னும் பலவழிகளும் உள்ளன.**

தற்சமயம் கிரககணித உபகரண சாதனங்கட்கு இந்த $\pi$ (பை) யை = 3.1415926535897932... இந்தஸ்தானத்துக்குமேல் கொண்டு கையாண்டதாகத் தெறியவில்லே. தற்சமயம் புழக்கத்தில் ப்ரசித்தமாக இருக்கும் சேம்பர்ஸ் மேதமேடிகல் டேபிளேக் கண்டவர்கட்கு ($\pi = 3.1415926536$) இந்த ஸ்தா னத்துக்குமேல் கையாளவில்லே என்பது நன்ருகத் தெரியும். டேபிலுக்குட் பட்ட ஸைன் முதலிய (வானகணித) உபகரணங்களும் (7பிகர்) ஏழுஸ்தானத் துக்குமேலில்லே. ஒன்பது ஸ்தானத்தில் அறைகுறையுடன் எங்கேயோ சிற்சில விடங்களிலிருப்பதாகச் சொல்லிக்கொள்கிருர்களே தவிர நேறில் கண்டோர் யாருமிலர்.

தற்சமயம் உபயோகத்திலிருந்து வரக்கூடியவை.

$\pi = \left(\frac{\text{வட்டம்}}{\text{விட்டம்}}\right) = \frac{3}{1}; \left(\frac{16}{5}\right)\frac{22}{7}, \frac{333}{106}, \frac{355}{113}, \frac{103993}{33102}, 3.14159265359.... \rightarrow$

இவைகள் ஒன்றுக் கொன்றைவிட சூக்ஷ்மங்கள் (சுத்தங்கள்) ஆகும்.

$\left\{\frac{31416}{10000}\right\}$ = ஷ $\pi = \left(\frac{\text{வட்டம்}}{\text{விட்டம்}}\right)$ ஐக் கொண்டு கவிக்கவேண்டிய வட்ட உருவக் கணிதங்கள் விவரிக்கப்படுகின்றது.

ஆரியபட்டார்ல் நிச்சயிக்கப் பட்ட $\left\{\frac{\text{வட்டம்}}{\text{விட்டம்}} = \frac{62832}{20000} = \frac{3927\times16}{1250\times16} = \pi\right\}$ ∴ பாஸ்கார் மதப்படிக்குறிய $\left\{\frac{\text{வட்டம்}}{\text{விட்டம}} = \frac{3927}{1250},\right\} = \left\{\frac{3\cdot1416}{1\cdot0000}\right\}$ தற்சமய உலக வழக்கிலுள்ளவை யிவைகளே.

(1) ஸமவட்ட க்ஷேத்ரகணிதம். (சிலவிவரம்) இங்கு $(\theta A)$ = அறை விட்டம் = 10000 ∴ ஆனல் ⊙ = (ADBC) = 62822 ஆகும். (AB) = விட்டம் = முழுவிட்டமானல் ⊙ = (ADBC) = 31416 என்றாகும் (AB) = 1 = ஒனறாகக் கொண்டால் ⊙ = (ADBC) = $\left(3\frac{14159265358979 32}{10000000000000000}\cdots\right)$ = 3·14159265358979 32 . . . . →என்றாகும் இஷ்டம் போல் கொள்க (. . . .→) இக்குறிப்பு முடியாமல் (சணிக்கும் எண்கள்) போவதைக் காட்டும்.




(படம் = 3)

விஞவிடைகள் இதைப்பற்றியவைகள்:—

(கஜம் = 12) குறுக்களவு (விட்டம்) உள்ள துறவுக்கு (கிணற்றுக்கு) சுத்தளவு என்ன, விஸ்தீர்ண மென்கிற குழி என்ன?

என்றல்:—

தெரிந்த விட்டத்தை (31416)ஆல் பெருக்கி (10000)ஆல் வகு; ஈவே வட்டமாகும். இப்படி வந்த வட்டதை விட்டத்தால் பெருக்கியதை நாலால் (4 ஆல்) வகுத்த ஈவு அந்த வட்டத்துக்குழியாம். (என்றல் வட்ட விஸ்தீர்ண மென்கிற விசாலமாகும்).

அல்லது $(\frac{31416}{10000})$ஐயே விட்டவர்க்கத்தால் பெருக்கி நாலில் வகுத்தாலும் வட்டக்குழி வந்து விடும். இல்லையேல் $(\frac{31416}{10000})$ஐ அறை விட்ட வர்க்கத்தால் பெருக்கினலும் வட்டக்குழி வந்துவிடும். இதற்குச்சமீகாணம்:—

(1). வட்டம் $= \left(\frac{31416}{10000}\right) \times$ (விட்டம்);

(2). வட்டக்குழி $= \frac{1}{4}\left\{\right.$(வட்டம்) (விட்டம்)$\left.\right\}$. அல்லது

வட்டகுழி $= \frac{1}{4}\left\{\left(\frac{31416}{10000}\right)\right.$(விட்டம்)$\left.^2\right\}$ இல்லேயேல்

வட்டகுழி $= \left\{\left(\frac{31416}{10000}\ \pi\right)\right.$(விட்டம்/2 = அரைவிட்டம்)$\left.^2\right\}$

தெரிந்த விட்டம் (12) பனிரண்டை (31416)ல் பெருக்க 376992. இதை (10000)ல் வகுக்க ஈவு $37\frac{6992}{10000}$; இதேதான் 12கஜ விட்டக்கிணற்றின் சுத்தளவாகும்.

∴ விட்டம் = 12க்கு, சுற்று அளவு $= 37\frac{6992}{10000}$, என்பதாம்.

வட்டக்குழிக் கணிக்கும் உதாஹரணம்:—

விட்டம் = (12) கஜம் ஆகையால் இவ்விட்ட வட்டத்தின் குழி என்ன வென்றால்:—

12 விட்டத்தின் சுத்து $37\frac{6992}{10000}$ இதை (ஷ 12ன் கால்பங்கால் ($\frac{12}{4} = 3$)ஆல் பெருக்க) ஷ வட்டம் $37\frac{6992}{10000}$க்குச் சமம் = 37·6992 இதை 3ஆல் பெருக்க (37·6992 × 3) = 113·0976ம் வட்டக்குழியாம்.

இங்கே படம் நாலை (4ஐ)க் கவனி:—

இங்குள்ள வட்டத்தில் (O) என்பது சிறிய பெரிய இருவட்டங்களின் மத்திய கேந்திரம் (மத்தி = ஸென்ட்ரல்).

பெரிய அறைவிட்ட = O B = 6.

சிறிய அறைவிட்ட = O A = 3.

என்றுமுதலில் நிச்சயிக்கவும்.

பிறகு:—

(4 × 4) = 16 சதுர (கஜ)க் குழிக்கு வெள்ளை வர்ணம் பூச கூலி (10) ரூபாய், மஞ்சள் வர்ணம் பூசக் கூலி (15) ரூபாய் ஆகையால் படத்தில் கண்ட சிறிய வட்டத்துக் குழிக்கு மாத்திரம் மஞ்சள் பூச்சும், இச்சிறிய வட்டத்துக்குமேல் மிகுதியாயிருக்கும் பெருவட்டகுழிக்கு வெள்ளைப் பூச்சும் பூசத்தரவேண்டிய கூலிகள் எம்மாத்திரம்.



(படம் 4)

என்றால்:—

இதன் விகிதஸாம்யகணிதம்:—

முன் சொன்னபடி சிறிய வட்டத்துக்கும் பெரிய வட்டத்துக்கும் குழி கணித்துப் பெரிதில் சிறிதைக் கழித்த மிச்சமே—(சிறியவட்டக்குழி கழிந்த) பெறிய வட்டக்குழியாகும். என்பது பொதுவாகத் தெரிந்துவிடும்.

சிறியவட்டக்குழியின் சம்பந்தமில்லாமலே, சிறிய பெரிய அரை விட்டங்களைக்கொண்டே பெறிய வட்டச் சொச்சக்குழியைக் கணிக்கும் வழி:—

படம் 2 ஐப்பார் = ($A; A_1; A_2 \odot$) = சிறுவட்டம்; ($B; B_1; B_2 \odot$)= பெருவட்டம்.

∵ {(பெருவட்டக்குழியில் சிறுவட்டக்குழி கழிந்த சொச்சப் பெறுவட்டக்குழிக்கு)}

$$= \left\{(\odot\ B, B_1, B_2)^2 - (\odot\ A. A_1; A_2{}^2)\right\},$$

பெரிய அறை விட்டவர்க்கத்தில், சிறிய அறை விட்டவர்க்கத்தைக் கழித்த மிச்சத்தால் ($\frac{31416}{10000}$ = π) = 3·1416.ஐப் பெருக்குவதே பெரு வட்டச் சிறுவட்டக்குழிகட்குறிய அந்தர (வித்யாஸ)க் குழியாம்.

இல்லையேல்:—

பெரு அறைவிட்டத்தில் சிறு அறைவிட்டத்தைக் கூட்டுந் துகை; பெரு அறை விட்டத்திற்சிறு அறை விட்டத்தைக் கழித்ததுகை, (π) ஆ இம் மூன்று துகையையும் ஒன்றுக் கொன்று பெருக்கியதும் (முன் போல) இருவிட்ட வட்டக்குழிகளின் அந்தர (வித்யாஸ)க் குழியாம்.

குறிப்பு:— பெரு அறைவிட்டம் = (பெ. அ. வி)

சிறு அறைவிட்டம் = (சி அ.வி) ∴

{(பெருவட்டக்குழிக்கும் சிறுவட்டக்குழிக்கும் உள்ள அந்தர (வித்யாஸ)க் குழி)} = {(பெ. அ. வி)$^2$ —(சி அ. வி)$^2$} × π

= (பெ. அ. வி + சி. அ. வி) (பெ. அ. வி—சி. அ. வி) π.

என்று இவ்விரு வழியிலும் விடை வருவது சமமேயாகும்.

இதற்கு இங்கு பெரு விட்டம்= 12 கஜம். இதன் வட்டக் குழிக்கணிக்க $\pi \times (\frac{12}{2})^2 = 3{\cdot}1416 \times 6 \times 6.$

$= 3{\cdot}1416 \times 36.$

$= 113{\cdot}0976 =$ பெருவட்டகுழி.

$\pi \times (\frac{6}{2})_2 = 3{\cdot}1416 \times 3 \times 3)^2$

$=3{\cdot}1416 \times 9.$

$= 28{\cdot}2744 =$ சிறு வட்டக்குழி.—

$(113{\cdot}0976 — 28.2744) = 84{\cdot}8232 =$ இருவட்டக்குழி யந்தரம்.

இதைத்தான் சிறுவட்டக் குழிக்கு (குழியால்) மிச்சமான பெருவட்டக் குழி என்று சொல்வது வழக்கம்.—

வட்டக்கூலி விசேஷக்கணக்கிங்கு:—

—8 கஜம் குறுக்கில் ஓர்வட்டக்கிணர் ஏற்கனவேயுள்ளது; இதையே சொந்தக்காரனுக்கு -14-கஜம் அகலத்தில் உள்ள வட்டக்கிணறுக்க வேண்டு மென்று தோன்றியது. இவன் ஏவலால் கூலிக்காரர்கள்:—தோண்டக்கூலி— முதல்மட்டிக்கு ஓர் சதுர கனக்கஜக்குழிக்கு -கால் ரூபாயும்; மட்டு 2ல் $\frac{1}{2}$; மட்டு 3ல் 1, மட்டு 4ல், 2; மட்டு 5ல் 3, மட்டு 6ல் 4, மட்டு 7ல் 5 ரூபாய்கள் விதம் கூலி கேட்டனர். ஆகையால் தோண்டிய ஆட்களுக்குச் சேர வேண்டிய மொத்தக் கூலி ரூபாய்கள் எவ்வளவு என்னில்:—

(**87**ம் **88**ம்) பக்கத்தில் காட்டிய விவரப்படிக்கு:—

குறிப்பு.—

பெரு அரைவிட்டம் = (பெ. அ. வி) = A

சிறு அறைவிட்டம் = (சி, அ. வி) = B

(ஒரே மத்திமகேந்திர (ஸண்ட்ரல்) முள்ள இஷ்டமான இருவட்ட வித்யாஸக் குழி) = $\pi$ (பெ. அ. வி + சி. அ வி) (பெ. அ. வி—சி. அ. வி) =(A+B) (A—B) (3.1416).

$\therefore$ இங்கு:- 2A=14, 2B=8 $\therefore$ A=7, B=4.

$\therefore$ (A+B) (A—B) = 11 × 3 = 33 [$\therefore$]

(ஓர் மட்டுக்குறிய இருவட்ட வித்யாஸ (சொச்ச) கனகஜக்குழிக்கு) } = (33 × 3·1 4 1 6) = 103·6728. என்று ஏற்பட்டது, இதற்குக்

---

கூலி ரூபாய் கணிக்கும் விவரணம்:—

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (மட்டு 1 | ரு | கூலிரூபாய் $\frac{1}{4}$ | $\therefore$) | கூலி | = | 103.6728 | × | $\frac{1}{4}$ | = | 25·9182 |
| (மட்டு 2 | ரு | கூலிரூபாய் $\frac{1}{2}$ | $\therefore$) | ஷை | = | 103.6728 | × | $\frac{1}{2}$ | = | 51·8364 |
| (ஷை 3 | ரு | ஷை 1 | $\therefore$) | ஷை | = | 103.6728 | × | 1 | = | 103·6728 |
| (ஷை 4 | ரு | ஷை 2 | $\therefore$) | ஷை | = | 103.6728 | × | 2 | = | 207·3456 |
| (ஷை 5 | ரு | ஷை 3 | $\therefore$) | ஷை | = | 103.6728 | × | 3 | = | 311·0184 |
| (ஷை 6 | ரு | ஷை 4 | $\therefore$) | ஷை | = | 103.6728 | × | 4 | = | 414·6912 |
| (ஷை 7 | ரு | ஷை 5 | $\therefore$) | ஷை | = | 103.6728 | × | 5 | = | 518·3640 |

ஆகமொத்தம் [=($15\frac{3}{4}$. ) ] குக் ரூபாய்களின் = 1632·8466-ரு

இங்குவிடை = 1632·8466. ரூபாய்கள் கூலியாம்:—

இல்லையேல்:—

ஷை மட்டுக் கூலி விகிதம் 7ம் கூட்டிய = ($\frac{1}{4}+\frac{1}{2}+1+2+3+4+5$) = $15\frac{3}{4}=\frac{63}{4}$ இதை மட்டுக்குழியாகிய (103·6728)ஆல் பெருக்கினாலும் கூலிரூபாய்களின் ($103.6728\times\frac{63}{4}$ = 1632·8466) என்று வந்துவிடும், இது சுலபவழி.

கூலி கொடுக்கவேண்டிய ரூபாய் = 1632.0000

அணுக்கள் = $(.8466 \times 16) = 13{\cdot}5456.$

தம்பிடிகள் = $(.5456 \times 12) = 6{\cdot}5472.$

ஆ { ரூபாய் = 1632; அணு = 13; பை = 6·55 }

கூலி ரூபாய்களின் = 1632-13-7 என்பதுதான் இங்கு விசேஷம்.

பெரு அறை விட்டம் = (பெ. அ. வி.) = 6; இதன் வர்க்க = 36

சிறு அறை விட்டம் = (சி. அ. வி.) = 3; இதன் வர்க்க = 9

ஷை இருவர்க்க வித்யாசமிதன் = 27

ஷை $3{\cdot}1416 \times 27 = 84{\cdot}8232$ = இருவட்டகுழி(வித்யாஸம்). யந்தரம்.

அல்லது.

$\{$(பெ. அ. வி.) + (சி. அ. வி.)$\}$ $\{$(பெ. அ. வி.) − (சி. அ. வி.)$\}$ $\pi$

$= (3{\cdot}1416)\ (6 + 3)\ (6 - 3).$

$= 3{\cdot}1416 \times 9 \times 3.$

$= 3{\cdot}1416 \times 27 = 84{\cdot}8232.$

= இருவட்டக் குழியந்தரம்.

இம்மூன்று விதவழியிலும் வந்த விடைகள் சமமே.

ஆகையால் இஷ்டமான வழியில் கணித்துக் கொள்க—.

இனி பூச்சுக் கூலி கணிக்க:—

சிறு வட்டக்குழி (மேலேகணித்தது) = 28·2744

சிறு வட்டக்குழி போனபெரு வட்டகுழி = 84·8232

ஷை ரண்டுங் கூட்ட—12—விட்ட வட்டக்குழி = 113·0976

சதுரகஜம்-16க்கு மஞ்சள் பூசக் கூலி = 15, வெள்ளை பூசக்கூலி = 10 ஆகையால் சிறுவட்டக்குழி = 28.2744 ரூ மஞ்சள் பூச

$$\frac{28.2744 \times 15}{16} = (424{\cdot}116 \div 16).$$

= 26·5072 ரூபாய் (மஞ்சள் பூசக்கூலி).

$$\frac{84{\cdot}8232 \times 10}{16} = \frac{848{\cdot}232}{16} = 53{\cdot}0145$$ சொச்சப்பெரு வட்டக் குழிக்கு

வெள்ளை வர்ணம் பூசக்கூலி ரூபாய் = 53·0145

1653/2.

ஆ பொத்தக்கூலி = (53·0145 + 26·507).

= { ரூ. அ. பை. 89 — 8 — 4·22 } என்பது.

மற்றும் வருவனவெல்லாமிப்படிக்குக் கண்டு கொள்ளவும்.—

வட்டக் குழிக்குரிய அறை விட்டக் கைவாரத்தால் (கம்பாஸால்) சுற்றிலும் நெருக்கடியாகத் தொடர்ச்சியுள்ள வட்டங்கள் வரைந்தால் (செய்தால்) முடிவில் இது பந்து முதலிய குண்டு உருவம் போன்ற கன (பரிமாணமுள்ள) மண்டலங்கள் (கன வட்டங்கள்) ஆகும். இவ்வித உருவமுடைய கனவட்டங்களுக்குத்தான் கோலம் என்கிற பெயர் என்று முக்யமாக இங்கு கவனிக்க வேண்டியது.

கோல மேற்பரப்புக்குழி (கோல கனக்குழி - முதலிய) கணிக்க:—

வட்டக்குழியை நாலில் பெருக்கக் கோல மேற்பரப்புக்குழியாகும். அல்லது அறைவிட்ட வர்க்கத்தால் ($\pi$) பையைப் பெருக்கினதை நாலி (4) ல் பெருக்கினாலும் கோல மேற்பரப்புக்குழி வந்துவிடும்.

கோலமேற்பரப்புக்குழியை விட்டத்தால் பெருக்கியதை ஆறில் வகுத்த ஈவு கோலமத்யகேந்திர (கர்ப்பகேந்திர)ாதி ஸம்மந்தமாகிற கோல கனக்குழியாம். இல்லையேல், கோல அறைவிட்டக் கனத்தால் $\pi$ (பை) பையைப் பெருக்கியதை நாலில் பெருக்கி மூன்றில் வகுத்த ஈவும் கோல கனக் குழியாக வரும்.

ஸமீகரணங்கள்:—அறைவிட்டம் = (அ.வி);

{ (கோலமேற்பரப்புக்குழி) = (கோ.மே.ப.கு) } = { (4 × வட்டக்குழி) }

= { ($4\pi$) (அறைவிட்ட)$^2$ };

{ (கோலகனக்குழிக்கு) } = { (கோ.மே.ப.கு) $\left(\frac{\text{விட்டம்}}{6}\right)$

= { $\frac{4}{3}\pi$ (அ.வி)$^3$ };

உதாரணம்:—

கஜம் = 6 அறை விட்டமுள்ள கோலத்தின் மேற்பரப்புக்குழியென்ன. கோல கனக்குழியென்ன வென்றால்:—

வட்டக்குழி (6 கஜ அறைவிட்ட வட்டத்துக்கு) = 113·0976 இதை நாலில் (4ல்) பெருக்கியது = 452·3904 மேற்பரப்புக்குழி, அல்லது ஷெ 6ன் வர்க்க = 6 × 6 = 36. இதை 4ல் பெருக்க = 144, இதை ($\pi$ = 3·1416) ஆல் பெருக்க = 452·3904 = கோல மேற்புக்குழி இவ்வழியிலும் வந்து விட்டது.

கோலகனங்கணிக்க:—

முன்வந்த கோல மேற்பறப்புக்குழி:— 452·3904. இதை இஷ்ட விட்டம் 12ல் பெருக்க = 5428·6848. இதை 6ல் வகுக்க: வந்த ஈவு 904·7808. இல்லையேல் ஷைக்கு இஷ்ட அறை விட்டம் 6 இதன் கனம் = 6 × 6 × 6 = 216. இதை 4ல் பெருக்க 864 = (216 × 4), இதை ($\pi$ = 3·1416)ல் பெருக்கியது = 2714·3424. இதை 3ல் வகுத்த ஈவு = 904·7808. முன்போலிங்கும் கோல கர்ப்பக்குழியென்கிற, கோல கர்ப்ப கனபலம் வந்துவிட்டது.

(2) சுத்தளவு ஆகிற வட்டம் தெரிந்த விடத்தில் குறுக்காகிய விட்டம் கணிக்க:—

கணித சுலபத்துக்காகப் பெரியோர்களால் நக்ஷத்ர மண்டலத்தை (பகோலத்தை)-21600'-கலைகளாகப் பிறிக்கப்பட்டிருக்கிறது. (என்பது கற்பனையாலேயே) ஆகையால் இதன் குறுக்க(ளவுக்க)ான விட்டம் அல்லது அறை விட்டம் (என்கிறத்ரிஜ்யா) என்ன அளவென்றால்:—

தெரிந்த வட்டத்தை ஒன்றால் பெருக்கியதை (3·1416 = $\pi$) ஆல் வகுத்த ஈவே அவ்வட்டத்தின் விட்டமாகும்.

இதைப் பாதிசெய்ய அறைவிட்டமாகும்.

இல்லையேல் வட்டத்தைப் பதினாயிறத்தால் பெருக்கி 3·1416ல் வகுத்த ஈவும் முன்போல் விட்டம் வரும்.

இதை 2ல் வகுக்க ஷைக்கு அறை விட்டமாகிய த்ரிஜ்யாவந்து விடும்.

இதற்கு சமீகாணமிங்கே:—

$$\text{விட்டம்} = \left\{\frac{\text{வட்டம்} \times 1}{(\pi = 3\cdot1416)}\right\} = \left\{\frac{\text{வட்டம்} \times 10000}{31416}\right\}.$$

தெரிந்தவட்டம் = 21600 இதை 1ல் பெருக்க 21600 இதை (3·1416 = $\pi$)ல் வகுத்த ஈவு $\left(\frac{31000}{3\cdot1416}\right)$ = 6875·15; அல்லது 21600ஐ (10000)ல் பெருக்க 216000000. இதை 31416-ல் வகுத்த ஈவு 6875 $\frac{15000}{31416}$ என்றாகும்.

மத்தும் வந்தன வெல்லாமிப்படிக் கணித்துக்கொள்ள வேண்டியது.




அல்லது வ. டு வி = π(R²−r²) எனவே

படம் (4 A)

படம் (4 A)க்கு விவரணம்:—

படம் (4 A)ஐக் கவனி:—

OC = பெரிய வட்டத்தின் அரைவிட்டம்,

AB = சிறிய வட்டத்தின் அரை விட்டம் ஆகும்.

குறிப்பு:—

இவ்விருவித வட்ட (ஸெண்ட்ரல்களும்) மத்திமங்களும் ஒன்றாக இருக்கவேண்டும் என்கிற அவசியம் இதைப் போன்ற க்ஷேத்ரங்களுக் கவசியமே கிடையாது. ஆனால் வட்டத்துள்ளே சிறுவட்டம் எப்படியாவது இருக்கவேண்டியது தான் ஒன்று.

[இங்கே சொன்ன விதியை படம் (4B)க்கும் (4C)க்கும் கொள்ள வேண்டியது அவசியம்]

என்பதை உணர்க :—

(AB) அரைவிட்ட வட்டக்குழி கழிந்த, (OC) அரைவிட்ட வட்டக்குழி (விசாலம்) எவ்வளவு என்றால் இதைக் கணிக்க :—

$\because$ OC = R; AB = r இங்கிப்படியானால் :—

[(பெருவட்டக்குழி) — (சிறுவட்டக்குழி)]

$= [\odot^2 - \odot^2]$

$= (\pi \times R^2 - \pi r^2)$

$= \pi (R^2 - r^2)$

$= \pi (R + r) (R - r)$

என்பதாயுணர்க.

---

படம் (4B) க்கு விவரணம்:—

படம் (4 B)ஐக் கவனி:—

இதிலும்:—

OB = பெருவட்டத் துரிய அரை விட்டம் = R.

AB = சிறுவட்டத் துரிய அரை விட்டம் = P;

இங்கே பெரு சிறு வட்ட ஓரங்கள் (B) என்றஸ்தானத்திலே சேருகின்றன. இன்னும் இது போல் பல விதங்களாக அமையத்தகும்.




ஆகையால்:—

(இங்கும் பெருவட்டச் சிறு வட்டக் குழி களின் வித்தியாசத்துக்குச்)

$= \pi [(OB)^2 - (BA)^2]$

$= \pi [(OB+BA)(OB-BA)]$

$= \pi (R+P)(R-P)$

மற்றவை படம் 4Aற் ச்சொன்னபடிக்காகும்:

படம் (4C)ஐக்கவனிக்கத்தம் இஷ்டம் போல்சந்தேகங்கள் யாவும் அற க்ஷேத்ரங்களைச்சாதனம் நன்கு செய்யலாம்:—

மற்றும் வருவன வெல்லாம் இவைகள் போலக் கொள்ளலாம்.

படம் (4C)க்கு விவரணமிங்கு காண்க:—



{படம்=4C}

படம் (4 C)ஐக் கவனி:—

பெரியதாகிய (வி) அரை விட்ட வட்டவிசாலத்தில், மற்றய சிறியவைகளாகிய ($வி_1$, $வி_2$, $வி_3$, $வி_4$, $வி_5$) அரை விட்ட வட்டங்களின் விசாலங்கள் கழிந்த மிச்ச(ப் பெருவட்டக்)குழி என்ன வென்றால்:—

இதற்குச் சில விவரணமிங்கு;

அரைவிட்ட = (வி):—

∴ விட்ட = 2 வி என்றாகும்.

பெருவட்ட அரைவிட்ட = வி = 4′ = (அ ஆ).

மற்றய சிறுவட்ட அரைவிட்டங்களினுடைய.

(இ ஈ) = ($வி_1$) = (2′)
(உ ஊ) = ($வி_2$) = (0·8′)
(எ ஏ) = ($வி_3$) = (1·6′)
(ஐ க) = ($வி_4$) = (1·4′)
(ஒ ஓ) = ($வி_5$) = (1′)
} என்பவைகளாகும்:—

இவ்வித க்ஷேத்ரங்கடக்கு மிச்ச வட்டக்குழிகணிக்கப் பொது விதி:—

சிறு அரைவிட்டங்களின் வர்க்கக் கூட்டலை பெறு அரைவிட்ட வர்க்கத்தில் கழித்த மிச்சத்தால் ($\pi = 3{\cdot}1416$)ஐப் பெருக்கியதே சிறுவட்டக் குழிகள் கழிந்த மிச்சமாகிய பெருவட்டக் குழியாகும்—.

இதற்கு விளக்கம்:—

இங்கு அரைவிட்ட = (R = r = வி) ஆகையால். பொதுவாய்

வட்ட விசாலக்குழி $= \pi\,(R = r)^2 = \pi\,வி^2$ ∵

∴ (இங்கு சிறுவட்டக் குழிகள் கழிந்த மிச்சமாகிய பெருவட்டக்குழி)

$$= \left\{ (\pi வி^2) - (வி_1^2 \pi) - (வி_2^2 \pi) - (வி_3^2 \pi) - (வி_4^2 \pi) - (வி_5^2 \pi) \right\}.$$

$$= (வி^2 \pi) - \pi\,(வி_1^2 + வி_2^2 + வி_3^2 + வி_4^2 + வி_5^2)\ ∵$$

$\therefore$ ஷை ரு = $(\pi)$ (வி$^2$ − வி$_1^2$ − வி$_2^2$ − வி$_3^2$ − வி$_4^2$ − வி$_5^2$ என்பதால் (மேற் கூறிய பொது விதிப் பிறப்பாம்.)

(இதற்குச் சமம்) = $\pi$ $\{$(வி$^2$) − (வி$_1^2$ + வி$_2^2$ + வி$_3^2$ + வி$_4^2$ + வி$_5^2$) $\}$.) என்றாயிற்று.

ஷைக்கு உதாரணமிங்கு காண்க—

வி$^2$ $= 4^2$ ரு $= 16$ இதில்

$$\left\{\begin{array}{l} \text{வி}_1^2 = (2)^2 = 4 \\ \text{வி}_2^2 = (0{\cdot}8)^2 = 0{\cdot}64 \\ \text{வி}_3^2 = (1{\cdot}6)^2 = 2{\cdot}56 \\ \text{வி}_4^2 = (1{\cdot}4)^2 = 1{\cdot}96 \\ \text{வி}_5^2 = (1)^2 = 1{\cdot}00 \end{array}\right.$$

(ஷை மொத்த வர்க்கக் கூடலின்) $= 10{\cdot}16$ இதை

கழித்தசேஷம் $(16 - 10{\cdot}16) = \mathbf{5{\cdot}84}$.

இந்த 5·84 ஆல் $(\pi = 3{\cdot}1416)$ஐப் பெருக்கியதற்கு (ச் சமம்) $= (3{\cdot}1416 \times 5{\cdot}84) = \mathbf{18{\cdot}346944}$. என்றாம்.

ஆதலால் ஷை 4 அறைவிட்டமுள்ள பெருவட்டக் குழியில், முறையே அறை விட்டங்கள் (2, 0·8, 1·6, 1·4, 1) உள்ள சிறுவட்டக் குழிகள் கழிந்த மிச்சக் குழிக்குச் சரி = ஷை **18·346944** என்று சொல்வது.

மற்றும் இதற்கு மேலும் வருவனவெல்லாமிப்படியே பார்த்துக் கொள்க.

---

$(\pi =$ பை)யைச் சம்பந்தித்ததும் பார்க்கக் கூடியவைகளு மாகிய சில விசேஷ க்ஷேத்ரங்கள் இங்கே காணவேண்டியது—.



(படம் = 5)



(படம் - 6)



(படம் - 7)

மரக்கால், படி, நாழி, முதலிய முகத்தலளவைக் கருவிகளும்; ஒழுங்குபெற ரூபாய், அறை ரூபாய், கால் ரூபாய், காலணு, தம்பிடி முதலிய நாணயங்களை ஒன்றன்மேல் ஒன்றாயடுக்கிக் காணப்படும் உருவும் படம் (ஐந்தை) (5ஐ) அனுசரித்திருக்கும்.

குழாய் முதலியன படம் (6)ன் உருவையனுசரித்திருக்கும்:—

கிரீடம்; கூறுப் (கூருருளையாய்) வரும்படி பருப்பு சர்க்கரை முதலியவைகளை கடிதாசியில் கட்டிய உருவம் முதலிய (படம் 7)ஐ அனுசரித்திருக்கும்.

இவ்வித உருவங்களைப்பற்றிய கணிதவிதம்.

ஒழுங்கான உருளையின் கனபரிமாணங் கணிக்க:—

உருளை, வட்ட ஓரங்களுள்ள பட்டையான வடிவமென்று நமக்குத் தெரியும் ஆகையால் இதன் கனபரிமாணத்தை (கனக்குழியை)க் கணக்கிட நாம் அடிப்பாகத்தின் பறப்பை (அடிபாகக் குழியை) உயறத்தால் பெருக்கவேண்டும். ஆகையால்

வட்டபாகத்தின் அறைவிட்டம் = (R) என்றும்.—

உருளையினுயரம் = (H) என்றும் ஏற்படுத்திக் கொண்டால்:—

இதன் கனபரிமாணத்தை நாம்:—

$(V) = \pi R^2 H$. என்கிற சூத்ரத்தால் கணிக்கலாகும்.

ஆகையால்:—

$$\left\{\begin{matrix}\text{ஒழுங்கான உருளை}\\ \text{யின் கனக்குழி}\\ = (\text{கனபரிமாண}).\end{matrix}\right\} = (\text{ஒ. உ. க. கு}) = V = (\pi R^2 H); \;.\;.\;.\; (1)$$

ஒழுங்கான உருளையின் தலப்பரப்பு என்கிற மேற்பரப்புக்குழி (உருளை தலக்குழி) கணிக்க:—

ஒழுங்கான - உருளைத் - தலக் - குழி = ஒ. உ. த. கு

$\therefore$ (ஒ. உ. த. கு) = $(2 \pi RH)$. என்றாகும் —

கனவடிவ உருளை ஒன்றுக்கு இதனுடன் கூட மேல்பக்கமும் அடிபக்கமும் உண்டு. இரண்டு ஓரத்தலங்களும் சமம்.

இவைகளின் மொத்தப்பரப்பு $=(2 \pi R^2)$ ஆகையால்.

(ஒரு உருளையின் மொத்தத் தலப்பரப்பு)

$= (2\pi RH + 2 \pi R^2)$ அல்லது இதன்

$= 2 \pi R (H + R)$. என்றுமாகும்:—

உருளை போன்ற குழாய் உருக்கள் கணிக்க:—

(படம் 6ல்) காட்டியவாறு கனஉருளைவடிவ மொன்றை யெண்ணிப்பார். இதிலிருந்து அதே உயரமும், ஆனால் அதைவிடக் குறைவான அறை விட்டமுள்ள வேறோர் உருளையை, வெட்டியெடுக்கப்பட்டதாகக் கருதுவோம். இப்படி வெட்டியெடுத்தபிறகு குழாய் ஒன்று ஏற்படுகிறது (காணப்படுகின்றது).

இவ் வடிவத்துக்கே குழாயுருளை என்ற பெயர்.

இதனால் தெரிவது யாதெனில்:—

ஒரு குழாயுருளையின் கனபரிமாணம் வெவ்வேறு அறை விட்டங்களுள்ள இரண்டு கன உருளைகளின் கனபரிமாணங்களின் வித்யாசமே.

இரண்டு உருளைகளின் அறை விட்டங்கள் R; r என்றும், உயரம் H என்றும், $R>r$ என்றும் கொண்டால்:—

(குழாயுருளையின் கனபரிமாணம்)

$$= \text{(குழாயுருளை கனக்குழி)}$$
$$= (\pi R^2 H - \pi r^2 H)$$
$$= \pi H (R^2 - r^2)$$
$$= \pi H (R + r) (R - r).$$

என்றாகும்.

இதனுடைய மொத்தத்தலப்பரப்பு, ஒன்று வெளிப்பரப்பினாலும்: மற்றொன்று உருளையின் உட்பரப்பினாலும் ஆகியது ஆகையால்.

இதன் தலப்பரப்பு = (குழா யுருளை தலப்பறப்பு) என்று கொண்டால்.

$$\text{(குழாயுருளை தலப்பறப்பின்)} = (2 \pi R H + 2 \pi r H)$$
$$= H\, 2 \pi (R + r).$$

இப்பரப்பில் நாம் மேல்பாகம் அடிபாகம் இவைகளின் பறப்பை கணக்கிலெடுத்துக்கொள்ளவில்லை யென்பது கவனிக்குக:—

---

படம் 8ஐக் கவனி. இது ஒழுங்கான வட்டக்கூருருளை க்ஷேத்ரமாகும்.—




(படம் = 8)

இப்பக்கத்தில் காட்டிய படத்துக்குறிய விவரணம்:—

மணற்குவியலின் ஒழுங்கு, தானியக்கும்பல், இதற்கென்றே செய்யப்பட்ட ஒழுங்கானபுனல் இவைகளெல்லாம் இந்த ($\triangle AOB$) க்ஷேத்ரம்போன்றவைகளே: இந்தவித உருவைத்தான் கூருருளை (கூர் + உருளை) வடிவமென்றழைக்கப்படுகிறது.

(OC) என்ற அச்சின்மூலமாக வெட்டப்பட்ட கூருருளையின் ஒரு பகுதியை பக்கத்தில் காட்டிய (8ம்) படம் தெரிவிக்கின்றது. OA; OB;- இவைகளை நாம் கூருருளையின் சாயந்த பக்கங்கள் என்று கூறுகிரோம். ($\angle AOB$) என்பது கூருருளையின் உச்சிக் கோணமாம்.

கனவடிவக் கூருருளைக்குத் தலங்கள் இரண்டுண்டு:—

(*a*) வட்டவடிவான அடிபாகம்.

(*b*) சாய்வு தலம்.

CO = செங்குத்து உயறம். AO = BO = சாய்வு உயரங்கள்.

செங்குத்து உயறத்தை h ஆலும், சாய்வு உயறத்தை L ஆலுங் குறிப்பது வழக்கம்.

கூருருளையின் கனபரிமாணம்: = (கூருருளைக்கனக்குழி)

(i) குழிவான உருளையொன்றையும், குழிவான கூருருளையொன்றையம், எடுத்துக்கொள். இவைகளின் அடிப்பக்கங்களும், உயரங்களும் ஒன்றுக் கொன்று சமமாயிருத்தலவசியம். கூருருளையை மணலாலாவது, நீராலாவது நிரப்பி; உருளை வடிவத்திற்குள் ஊற்று, இவ்விதம் மூன்று முறை செய்தால் உருளை முழுவதும் நிரம்புவதை நாம் காணலாம்.

(ii) கனவடிவமுள்ள உருளையொன்றையும், கூருருளையொன்றையும், எடுத்துக்கொள். இவைகளின் அடிப்பக்கங்களும், உயரங்களும் ஸர்வஸமமாயிருத்தலவசியம். இவைகள் ஒரே பொருளாலும் செய்யப்பட்டிருக்கவேண்டும். இரண்டையுந் நிறுத்துப்பார். இவற்றிலிருந்து கூருருளையின்னிறை உருளையின் னிறையில் $\frac{1}{3}$ (மூன்றிலொன்று) என்று நமக்குத் தெரியவரும்.

(iii) தண்ணீர் கொஞ்சமுள்ள இரண்டு அளவு பாத்திரங்களை எடுத்துக் கொள். இவைகளுக்குள் முழுகக் கூடிய ஒரே அடிபக்கமும், உயரமுமுள்ள உருளை யொன்றையும்; கூருருளை யொன்றையும், இவ்விரண்டையும் பாத்திரங் களில் போடு. தண்ணீர் மட்டங்களின் அதிகத்தைக் கவனி.

இச்சோதனைகளிலிருந்து நமக்குத் தெரிவது யாதெனில்:—

கூருருளையின் கனபரிமாணம், ஸம அடித்தலமும்-சம உயரமும்-கொண்ட உருளை யொன்றின் கனபரிமாணத்தில் மூன்றிலொரு ($\frac{1}{3}$). பாகம்

உருளையின் கனபரிமாணம் $= (\pi r^2 H) = \pi r^2 h$.

ஆகையால்

கூருருளையின் கனபரிமானம் $= \frac{1}{3} \pi r^2 h$. என்றும்.

கூருருளையின் தலம்:— என்றால்: கூருருளை மேற்பரப்பு:—

(i) கூருருளையின் தலம் ஒரு வட்டத்தின் விருத்த கோணும் சமாகும். சாய்வு உயரம் L என்றும், அடிப்பாகத்தின் அறை விட்டம் r என்று மெடுத்துக்கொள்.

(சாய்வுத் தலத்தின் பரப்பு = விருத்த கோணும்சத்தின் பரப்பு) அதாவது.

(வில்லின்னீளத்திலறைபாகம் × விருத்தி கோணும்ச அறைவிட்டம்)

$\therefore$ ஷை $= \frac{1}{2} \times 2 \pi r \times L = \pi r L$.

கூருருளைப் படம். (AOBC)ஐக் கவனி:

இதில் $\angle$(OCB = OCA) ஒரு நேர்க்கோண முக்கோணமாகையால்

$(OB)^2 = (OC)^2 + (CB)^2$

அதாவது $L^2 = h^2 + r^2$. ஆகையால்.

வளைவுத்தலத்தின் பரப்பு

$$= \left\{ \pi r \sqrt{h^2 + r^2} = \pi r \, (h^2 + r^2)^{\frac{1}{2}} \right\}.$$

(அடிபாகத்தின் பரப்பையும் இத்துடன் கூட்டினால் கூருருளையின் மொத்தப் பரப்பு) $= \pi r L + \pi r^2 = \pi r (L + r)$ அல்லது இதனின் $= \pi r (r + \sqrt{h^2 + r^2})$.

குறிப்பு:— உயரமென்பது எப்பொழுதும் செங்குத்துயறத்தையேதான் குறிக்கும்:—




(படம் = 9)

அ




(ii) மேலே காட்டிய (9 - 10 ஆகிய) இருபடத்தையுககவனி:— ஆ

கூருருளையின் வளைவு பக்கம் அநேக சிறிய முக்கோணங்களால் ஆனவை என்று கருதிப்பார். [படம் (அ) வைப்பார்] படம் (ஆ) வாக அமைக்கப் பட்டாற்போல் இம்முக் கோணங்களை அமைத்ததாகக் கருதுவோம் முக். கோணங்கள் சிறியதாகச், சிறியதாக இவைகளின் எண்ணிக்கை அதிகமாகும். முக்கோணங்களின் பரப்புகளின் மொத்தம் = ( ABCD▭ ) என்ற நீண்ட சதுறப் பறப்பினுடைதற்குச் சமம் = (AB × BC.) இங்கே AB = கூருருளையின் அடிப்பாகத்தின் சுற்றளவிற் பாதி. BC = கூருருளையின் சாய்வு (L) உயறம் ஆகையால்:—

(கூருருளையின் வளைவு தலப்பறப்பு) = $[(\pi r L) = (\frac{1}{2} \times 2\pi r \times L)]$
(மொத்த தலப்பறப்பு) = $(\pi r L + \pi r^2) = [\pi r (L + r)]$ என்பதாம்.

இதுபோல் வந்த க்ஷேத்திரங்களை மேல் சூத்திர உதவியால் கணித்துக் கொள்ள வேண்டியதாகும்.

இக்கூருருளைச் சம்பந்தமான கணக்குக்கு உதாரணம்:—

ஓர் நெல் (தானியம்) அம்பாரம் ஒழுங்கான கூருருளை வடிவத்தில் குவிந் திருக்கிறது. இதன் நுனிக்கும் (உச்சிக்கும்) அடிக்கும் உறிய (L) என்கிற சாய்வான உயறம் = 13 அடி. இதன் சுத்தளவோ சுமார் = 31.42; ஆகை யால் இவ்வம்பாரத்தின் மொத்தக் கனக்குழியடி என்ன, $1\frac{1}{2}$ அடி உயரம் $1\frac{1}{4}$ அகலம் மரக்கால் எத்தனை மரக்கால் இருக்கும்: கலம் முதலிய அளவில் இவ்வம்பார அடிக்குறுக்களவும் செங்குத்துயரமும் என்னென்ன இருக்கும்.

என்றால்:—

$\frac{31.42}{(\pi = 3.1416)}$ = 10 அடி குறுக்களவாகும் கீழே அம்பார அகலம்: (1).

ஷை 10ன் பாதியின் கீழ் அரைவிட்டம் = 5. அடியாகும்; (2).

ஷை அம்பாரச் செங்குத்துயர அடி = $(13^2 - 5^2)$
$= 169 - 25 = 144 = 12^2$,

ஆகையால்

அம்பாரச் செங்குத்துயரம் = 12 அடி ...(3)

அம்பாரத்தினடிக்குழியின் = $(3.1416 \times 5 \times 5)$ = 78·54 அடி. ...(4)

{வளைவுத் தலமென்னும் கூருருளையின் மேல் தலப் பறப்பு (மேற்பரப்புக்குழி) (இதில் கீழ்தலப்பறப்புச் சேரவில்லை)} = {= $(\pi r L)$ = $(5 \times 3.1416 \times 13)$ = $(15·708 \times 13)$ = $(65 \times 3·1416)$ = (204·204); அடி} (5)

{[(மேல்தலப்பரப்பு + கீழ்தலப்பு) = (ஆகவே மொத்தத் தலப்பரப்பினுடைய அடி)]} = (204·204 + 78·54)ரு = (282·744) .. (6)

{(கூருருளைக் கனபரிமாண மாகிய; இவ்வம்பாரக் கனக்குழியடிகளுக்குச் சமம்)} = $(\frac{1}{3} \pi r^2 h)$ ∴ இதற்கு = 26·18 × 12 = (314·16) ...(7)

மரக்கால் உயரம் = $1\frac{1}{2}$ அடி. அகலம் $1\frac{1}{4}$ அடி. எப்போதும் மரக்கால் வட்டரூபமாகவே யிருப்பதால்:- இதன் விட்டம் = $1\frac{1}{4} = \frac{5}{4}$ ∴ $\frac{1}{2}$ விட்டம் = $\frac{5}{8}$ = $(\frac{5}{4} \times \frac{1}{2})$ ∴ இதன்குழி = $3·1416 \times \frac{25}{64}$ = $.0490875 \times 25$ = 1·2271875 = (இதே ஷை மரக்காலின் குழி)

∴ ஷை மரக்கால் கனக்குழியின் = 1·2271875 × (1 1/2 = 3/2 = 1·84078125

$$\therefore \left(\frac{\text{அம்பாரக் கனக்குழியடி} = 314·16000000}{\text{மரக்கால் கனக்குழி அடி} = 1.84078125}\right)$$

$$= \left(\frac{314·160}{1.841}\right) = (170·646) \text{ மரக்கால்.}$$

ஷை (1·841) கன அடி மரக்காலால் (314·160) கன அடியம்பாரம்; ஆகும் நெல் மரக்காலின் = (170·646) என்றுமிதன் = 171.

இம்மரக்கால்களின் சலம் = [ $\frac{171}{12}$ = 14ள. 3ம. (அதாவது பதினாலு கலனே முக்குறுணி) = $14\frac{1}{4}$ள] என்பது.

மற்றும் வந்தனவெல்லாமிப்படிப் பார்த்துக்கொள்ளவும்.

ஒழுங்கான வட்ட உருளை என்பது கீழே சொன்ன மரக்கால் உயரம் $(1\frac{1}{2} = \frac{3}{2})$ அடி இதன் குறுக்கு விட்ட மென்கிற வகல அடி $(1\frac{1}{4} = \frac{5}{4})$ இதற்கு மேலே மரக்காலுக்குக் காட்டிய மொத்த கன அடி கணித உதாரணமே தான் ஒழுங்கான வட்ட உருளைக்காகும்.

மற்ற இதன் விசாலம் முதலிய கணிப்பவை சுலபமே யாகையால் உதகரிக்காமல் விடப் பட்டதாம் என்பது.—

---

## (படம் 11) இதற்குறிய சில விவரத்துச்குறிய குறிப்புகள்:—

இந்நீள் வட்டச் சம்பந்த மான ($\theta$ = கர்ப்ப கேந்திரம்) அல்லது மத்ய கேந்திரம், இக்கேந்திர பிந்துதைவ முக்யஸ்தான மாய்க் கொண்டு இந் நீண்ட வட்ட மேற்படுவதில்லை. ஆகையால் (க); ($க_1$) என்கிற ஸ்தானங்களில் உள்ள

மண்டல (நீள் வட்ட ஸாதகபிந்துக்கள் [அதாவது இரு கேந்
(நாபி)கள்] ஏற்படு மென்பதாம். இவ்விரு நீள் வட்ட நாபி (க $க_1$)க
எப்போதும் இவ்வட்டத்துள்ளடங்கிய நீண்ட விட்டத்தில் (வியாஸத்
தான் நிற்கும். (1).

வாஸ்தவத்தில் வான வெளியில் சலித்துச் சுற்றும் கிரக வட்ட (வக்ர)ரே
[($a$, bக் களின் வித்யாஸ அறை விட்டத்தையுடைய) (⊙ ABCD) ] யை
அனுசரித்திருக் கின்றது—சுமாராகப்பார்க்க அந்தக் கிரகங்களின் போக்
குறிய நீள்வட்டரேகை போலத் தோன்றலாகும் $a$, b ($\frac{1}{2}$ வியாசங்க
அரை விட்டங்களும் சற்றேறக் குறைய (சுமார்ரக) ஒன்றாகவே இருக்
ஆகையால் பூர்விக வானசாஸ்திரிகளால் நீள்வட்டச் சம்பந்தமான கிரக(
பலஸாதனமும் ஸமவட்டத்தை யனுஸரித்தேயுள்ளது.

மற்ற விவரம் பொது விதியில் பார்—(AC = 2$a$, BD = 2$b$) இ
பற்பல வித்யாஸமாகலம்.

மேலும் நீண்ட வட்டத்தைப் பற்றிய விஷயம்:—




(படம் =11)

மேலே (படம் 11-ல்)காட்டிய க்ஷேத்ரம் போல் உள்ளவைகட்கு வட்
மத்திய கேந்திரம் (ஸன்ட்ரல்)கள் இரண்டுண்டு. ஆகையால் இதற்குரிய அ
விட்டம் (OB = OD = b, AO = OC = $a$) அறை விட்டம் மத்ய கேந்
கோணங்கள் தோறும் வேறுபட்டுக் கொண்டே b யிலிருந்து $a$ வறைய
விருத்தியையும் இம்முறையிலேயே குறைவுமடையும். என்பதை முதலி
இவ்வித நிலங்கட்குக் கவனிக்க வேண்டியதவசியம்.

இங்குதெரிந்த அரைவிட்ட வித்யாஸமான $a$,bக் களைக்கொண்டு நீண்
வட்டமாகிய (⊙ ABCD)யின் நீண்ட வட்டக்கோடு கணிக்க:—

விபரம்:—

இருவித விட்டங்களின் வர்க்கங்களைக் கூட்டிப் பாதி செய்ததை மூலம் செய்
தால் (மூலித்தால்) (2π = 2பை)யைப் பெருக்கியதே நீண்ட வட்டரேகை.

பெரு அரை விட்டம் சிறு அறை விட்டம் π. இம் மூன்று தொகைக
ஒன்றுக் கொன்று பெருக்கியதே நீண்ட வட்டக்குழி என்கிற நீண்ட வட்ட
த்துடைய விசாலமாம்.

இதன் சமீகரணம்:—

$$(\text{நீண்ட வட்டரேகை}) = 2\pi\sqrt{\left(\frac{a^2 + b^2}{2}\right)} \quad \ldots \quad (1$$

$\left\{\begin{matrix}\text{(நீண்ட வட்டக்குழி யவ்லது} \\ \text{நீண்ட வட்ட விசால விஸ்தீர்ணம்)}\end{matrix}\right\} = (\pi \cdot a \cdot b)$ . . . (2).

ஷெக்கு உதாஹரணம் கீழ் காண்க:—

ஷெ கண்ட நீட்ட வட்ட அறை விட்டங்களாகிய $a = 8$, $b = 6$ ஆனல் (⊙ ABCD) என்கிற நீண்ட வட்டரேகை என்ன; ஷெ நீண்ட விட்டக்குழியளவு மென்ன வென்றால்:—

$$\odot\ ABCD = 44{\cdot}42851 = \left\{\begin{array}{l}(2\times 3{\cdot}1416)\sqrt{\left(\frac{8^2+6^2}{2}\right)} \\ =\sqrt{6{\cdot}2832}(32+18) \\ =(6{\cdot}2832)\times\left\{\sqrt{(50)}=(7{\cdot}071)\right\}\end{array}\right.$$

இதற்கு மற்றோர் வழி சுலபத்தில்

ஷெ ⊙ ABCD $= 43{\cdot}9824 = \pi\,(a + b) = 3{\cdot}1416 \times (8+6)$ இது அதை விட ஸ்தூல அளவைத்தான் காட்டும்: அதேவெகு நுட்பவிடை.

$\left\{\begin{matrix}\text{[ நீண்ட வட்ட (⊙ ABCDயின்} \\ \text{குழி) (ப்பாப்பு) விசாலம் ]}\end{matrix}\right\} = 150{\cdot}7968 = (\pi\ a\ b)\ (31416 \times 8 \times 6).$

என்பதாம்.

மற்றும் வந்தனை வெல்லாமிப்படி பார்த்துக் கொள்ளவும். (புத்தக விஸ்தாபயத்தால் இதோடு இவ்விஷயங்கள் நிறுத்தப்பட்டன).

விருத்தம்:—

ஒருபதினாறினாடே
உத்திடுமிருபதுக்கே—
வரு நிலமென்ன வென்னில்;—
மருவிய ஒன்றுக்கோரா கவும் வளுத்து வீரே—(46)—

என்பது:—

கீள் மேல்—ய்சு (16)க்கு தென் மடல் (உய = 20)ரு (ஒன்றுக் கொன்று நீழ்ச்சியில் விகித விசாலப் பரிமாணம்) யெத்தனை யென்னில்:—

ய்சு (16)யும் (ய $= \frac{1}{16}$)ல் கழிக்க—க (1), உய (20)யும் — ய ($\frac{1}{16}$)ல் களிக்க—கவ ($1\frac{1}{4}$) ஆதலால்:— கவ ($1\frac{1}{4}$)ரு—ப—ஒ—(மா-காணி )என்பது.

யெதுவுமிப்படிப் பார்த்துச் சொல்லவும்.—

வெண்பா:—

பாராய்கீள்மேல் பனிரண்டே: தென்மடலே
ஓராமல் நிலமுக்காணியாம் நேராக—
வந்தநில முந்திரியாய் மாருபதினாரினிலே
தொந்தமுரு கைக்கீய்ந்து சரிசொல் = (47)

என்பது:—

கீழ்மேல் - யஉ (12) ரு தென் மீ அரியாமல் நிலம் சூ (3/80 = முக்காணி யானல் தென் மீ சொல்லறியு(ம்) வகை—

இங்கு முழம் 1க்கு அங்குலம் (= 24) ஆகும்.

இவ்வித கணிதவிசேஷமென்னவென்றால்:—

பூமியில் அளக்க முடியாத தூரம் உயரம் இவைகளையுங் கணிக்க இயலு மென்பது.

ஆனால் சந்திரன் முதலிய கிரகங்களின் ஸ்தான சம்பந்தங்கள் வெகு தூரம் தாண்டியும் நிழல்முதலிய வித்யாஸங்களை வேருகக் கணித்தறிவது கஷ்டத்தில் ஆகின்றது. அதுபோலின்றி வித்யாஸமடையுந்தன்மை பெற்ற அவயவங்களுள்ளவைகளாக இருக்கவேண்டும்: என்பதை முதலிலுணர்க:—

வேறு (சில) விசேஷகணிதமிங்கு;—

ஆற்றில் நிறையஜலம் போகும் போது இவ்வாற்றை ஜனங்களால் தாண்ட முடியாமல் போகும், தற்சமயம் ஆற்றினகலம் தெரியவேண்டுமேயாகில்:—

இதைக்கணிக்க வேண்டிய விவரணம்:—

இச்சம்பந்த உருவ அமைப்பிங்கு:—

இந்த உருவப்படத்தில் உள்ள:

(படம்-42—ஐக்கவனி)

(படம் = 42)

A

C

B

D

O

E

(AB) = அளக்கமுடியாததாகிய தெரியவேண்டிய நீளம்.

(BC = CD); (DE) இவைகள் தெரிந்துக்கொள்ளக்கூடிய இடங்களாகும். ஆகையால் (DE = AB) என்றாகும்.

விளக்கமின்னும்:—

முதலில் Aஐ எதிர்கரைமேல் தெரியக்கூடிய ஓர் அடையாள மாகிய அசைவற்ற மரம் அல்லது பாறை முதலியவைகளாகவோ அல்லது வீடு, கோயிலாகவோ கொள்க. பிறகு அதற்கு நேரே-தான் இருக்குமிடத்தில் நேர்க்கோட்டிலமையும்படி தன் முயர்ச்சுயால் Bயில் ஓர் அடையாளம் வை. (B)யிலிருந்து தன்னிஷ்டப்படி (C) தூரத்தில் மற்றோர் அடையாளமும், இந்த (C) விருந்து (BC) அவ்வளவே தூரத்தில் Dயில் மற்றோர் அடையாளமும் வைத்தால்;—

(BC = CD) என்பது ஆகும்.

பின்பு, Dயிலிருந்து DE ரேகையிலேயே — Cஆல் A மறைவுபடும், வரையில் அல்லது ஒரே நேர்கோட்டில் ACE ஆகியவைகள் சம்பந்திக்கும் வரையில் பின்னேக்கினல் அப்போ ACE ஒரே நேர்க்கோட்டிலமையும். இப்படி அமையும் E என்கிறவிடத்தில் ஒரு அடையாளம் வை: இதன் பிறகே உனக்கு ED எவ்வளவு நீளமோ அவ்வளவே நீளம் AB என்பது புலப்படும்.

ஆகையால்தான் AB = DE என்று ஆயிற்று.

குறிப்பு:— இங்கே காட்டப்பட்ட (AB) ரேகையை:—

(17—18ம் படத்துக்குச்) ல் சொல்லிய (CB) =($a_1$) ரேகையாகப் பாவித்துக் கணிதம் செய்தும் நீளம் நிச்சயித்துக்கொள்ளலாம்

போக முடியாத குளத்தின் எதிர்க்கரை, ஏறிக்கால்வாய் முதலிய அகலங்களையும் இவ்வித ரேகா கணிதப்படித் தெரிந்துக்கொள்ளலாம் சுலபத்தில்:—

(விசேஷம் :—)

(17—18-ம் படத்துக்குச்சொன்ன) க்ஷேத்ரத்தின் கணித்தாலும் ஷ (AB) போன்ற அகலங்கணிக்கலாம். இது கேவலம் கணிதத்தோடு கூடியதாகும், (அவ்வளவு சுகமிதற்கில்லை).

(படம் 43) ஜநன்குகவனி




இந்த க்ஷேத்ரத்தில் நேர்க்கோண முக்கோணங்கள் இரண்டுள்ளன அவைகளாவன:—

∠DEA; இங்கு = ∠E = 90°,

∠ECA; இங்கு = ∠C = 90

இதில் தெரியவேண்டிய கோடு — BA — இதுவும் ABCD ரேகையிலிருக்கிறது. இங்கு (AB) = (AD — BD) ∴.

இங்கு தெரியவேண்டிய கோடு (BA) அல்லது (DA) ரேகை பூருவும்:—

இங்கு தெரிந்தவை ∠DCE = 5; 12; 13 புஜங்காடங்கிய முக்கோணம் இதனல்:—

(DA) என்கிற ∠(DEA)ன் ஓர் புஜமாகிய கர்ண நீளங்கணிக்க:—

முன்சொன்னபடி:—

$$\frac{(DE)^2}{DC} = \frac{(DE)(DE)}{DC} = \frac{13\times13}{5} = \frac{169}{5} = 33{\cdot}8 = DA$$

$\therefore$ (AB)= தெரிந்த (AD − BD) = **(33·8−5−7) = 21·8**

இங்கு:—

BC = 7 $\therefore$ BD = (7 + 5) = 12 ($\therefore$ முன்போல்)

$\therefore$ AB = (33·8 − 12) = **21.8**; என்பது

இங்கு தெரியவேண்டிய (AB) = **21·8.,**

குறிப்பு:—இந்த (B) ஸ்தானத்தில் (CE) ரேகையே இருக்கும் எதிர்கரையாக வைத்துக்கொண்டால் (CB) என்கிற கணிதமில்லாமலே சற்று சுலபமாகவும் கணிதம் முடிவுபெறும்.

மற்றும் வந்தனவெல்லாமிப்படிக்கணிக்குக:—

வேறு:—

(படம் **44**ஐ நன்கு கவனி):—




இங்கே:—

ரேகைகளையும் கோணங்களையுமனுசரித்த மற்றோர் விசேஷகணிதம்:

சுமாருக:— (**B** ஸ்தானம்) = மதருஸ் (**A** ஸ்தானம்) = டெல்ஹிஎன்றும், (S) ஸ்தானம் = ஆகாயத்தில் உயரே உள்ள ஓர்நக்ஷத்திரம் என்றுங்கொண்டால் இப்போ AB தூரம், = **95.** (A) கோணம் = 78°; (B) கோணம் = 79°; இவைகளைகொண்டு (S) ஸ்தானத்திய தெரியவேண்டிய கோணம்; AS அல்லது SB தூரம், இவைகளைக்கணிக்க:—

ஒருமனிதன் மதரு(Bயில்)ஸில் நின்று S என்ற நக்ஷத்திர ஸ்தானத்தை மேலே நோக்க (BS) என்ற ரேகை ஏற்பட இதன் ஸகாயத்தால் $\angle$B = 7்0ம்;

இதே ஸமயத்தில் மற்றொருவன் Aஸ்தான மாகிய, டில்ஹி யிலிருந்து S என்ற அதே நக்ஷத்திரத்தை நோக்க AS என்றேற்பட்ட ரேகை ஸகாயத்தால் (78° = A) கோணமும்.

மதராஸ் டில்ஹி தூரமும் நேர் AB ரேகையில் சுமார்(95″ அங்குலம்) என்றும், ஏற்பட.

AS, அல்லது BS தூர அங்குலம் என்ன-S ஸ்தான கோணம் (?) என்ன வென்றால்:—

S = (180° − A − B)

= (180° − 78° − 79°)

= **23°** = S என்பதை முதலில் கணித்துக் கொண்டு.—

மேதமேடிகல் டேபில் (**TABLES**) படிக்கு புஜஜ்ஜியா என்கிற(ஸைன்)

23°ஞ = 0·3907.
79ஞ = 0·9816.
78ஞ = 0·9781.
} என்றும் தெரிந்துக் கொள்க

**இதற்க்கு மேல்:—**

பொது வழியிங்கே:—

(S கோண = 23°) ஜ்யாவுக்கு இதன்ஸம் முகபுஜமான (AB ரேகை=95'') அங்குலமானால் (A கோண=78°) ஜ்யாவுக்கு (BS) என்கிற ரேகையாகும்:

இவ்விதமே B கோண (79°) ஜ்யாவுக்குASஎன்கிற ரேகை என்பது இவை களும் அங்குலத்தில் தான் வரும்:—

இதற்கு உதாரணம்:—

**44**ம் படப்படிக்குறிய:—

$$BS = \frac{\text{ஸை } A}{\text{ஸை } S}(AB) = \frac{\text{ஜ்யா } A}{\text{ஜ்யா } S}(AB)$$

$$= \frac{9781}{3907} \times 95'' = \frac{929195}{3907} = \mathbf{237{\cdot}8''} \text{ அங்குலம்}$$

$$AS = \frac{\text{ஸை } B}{\text{ஸை} S}(AB) = \frac{\text{ஜ்யா } B}{\text{ஜ்யா } S}(AB)$$

$$= \frac{9816}{3907} \times 95'' = \frac{932520}{3907} = \mathbf{238{\cdot}7''} \text{ அங்குலம்}$$

∴ BS = 237·8 அங்குலம், AS = 238·7 அங்குலம் என்றேற்பட்டது.

AB (ஸ்தானத்திய கார்டுரேகை) அளவுக்குறிய மைல்கள் முயற்சியால் தெரிந்துக்கொண்டு, BS. AS. மைல்களையும் அல்லது இஷ்டஅளவில் நீளங்களையுங் கணித்துக்கொள்ளலாம்.

இங்கு இக்கணித அதிசயத்துக்காக இதன் உருவ விவாணம் மாத்திரமே காட்டப்பட்டது.

விரிவடையும் பயத்தால் இதோடு நிறுத்திக் கொள்ளப்பட்டது.

(வேறு):—

மற்ருேர் விசேஷ க்ஷேத்ரங்களின் கணிதமிங்கு:—

(⊙ ABCD என்கிற வட்டத்தில் △ AOB, △ BOC, △ COD, △ DOA, என்று நான்கு (த்ரிபுஜங்கள்டங்கிய) த்ரிகோணங்கள் அமைந்திருக்கின்றன. ஸதா (AO, = OB, = OC = OD) இவைகள் எங்கும் ஒரே ஸமமாகவே அறைவிட்ட அளவாகத்தானிருக்கும். நேர்க்கோடுகள (AB = BC = CD = DA) இவைகள் தான் வில்லோரச்சம் பந்தக்கோடு தான்; வித்யாஸம் அடையுமென்பதாம்:—

இந்த வட்டத்துள் நாலு த்ரிகோணங்களமைந்ததாக உருவம் காட்டப்பட்டது ஒரு வட்டத்துள் இரண்டு த்ரிகோணம் முதல் பல த்ரிகோணங்கள் வறையில் படத்தில் காட்டிய வில்லின் ஓர புஜங்கள் மாத்திரம் ஸமவித்தியாஸத்தில் அமையலாம், அமைக்கப்படும்.

இவைகளைக் கணிக்கச் சூத்திரங்களிங்கு:—

குறிப்பு:— இரு த்ரிகோணமென்பதற்கு:—

படம் 45(-A)

∠ABC, ∠ADC இவ்விரண்டுக்கும் பெரிய புஜம் விட்டமாகிய AC யே யாகுமென்பதுணர்க:—

வில்லைத்தொடும்; நாண் உருவமுள்ள AB, போன்ற புஜ நீளங்களைக் கணிக்க:— இப்படி நாணாய் நிற்கும் புஜங்கள்:—

படம் 45 (-A)ல் கவனி:—

[ ஸமபுஜங்களாகிய இவைகளின் ஸாதனத்துக்கு வேறுவித வழியை இதன்பின் சோல்லப் படுகிறது.] (இங்கு வட்டத்துள்ளமைந்த முக்கோணங்கள் மூன்று முதல் ஒன்பது வரையிலுள்ளவை களான புஜங்கட்குக் கணிக்கும்வழி):—

| | | |
|---|---|---|
| (வேண்டிய புஜம் மூன்ருகில் பெருக்கு மெண்ணின்) | = | குணகம். 103923. |
| (ஷ நான்காகில் ஷ) | = | 84853. |
| (ஷ ஐந்தாகில் ஷ) | = | 70534. |
| (ஷ ஆருகில் ஷ) | = | 60000. |
| (ஷ ஏழாகில் ஷ) | = | 52055. |
| (ஷ எட்டாகில் ஷ) | = | 45922. |
| (ஷ ஒன்பதாகில் ஷ) | = | 41031. |

இவ்விதமிங்கு (மேலே) காட்டிய பெருக்கு மெண்ணாகிய குணகத்தால் வட்டவிட்டத்தைப் பெருக்கியதை லக்ஷத்திருபத்தாயிறத்தால் (120000) ஆல் வகுத்த ஈவே மேற்சொல்லப்பட்ட உருவுள்ள புஜநீளம் (வில்லின் நாண் நீளம்) ஆக வரும். இதற்கு 4 புஜம் (படத்தில் காட்டிய ரேகை AB) கணிக்க உதாரணம் பார்க்குக:—

இங்கு வட்டத்தின் விட்டம் AC = 110 ஆகில் AB, BC, CD, DA' என்பவைகளின் நீள மென்னவென்றால்:—

(விட்டம் = 110)ஐ (84853) ஆல் பெருக்கியது 9333830 இதை (120000) ஆல் வகுத்த ஈவு $77\frac{93383}{120000}$ அல்லது (78) என்றுங்கொள்க:—

இங்கு ஒன்பது த்ரயச்ரம் (புஜங்கள்) வரை ஏற்படுமவைகட்குத்தான் குணகங்கள் எழுவிதமாகக் கூறப்பட்டிருக்கிறது. விட்டமான வகுக்குமெண் 120000க்கு.

இதற்கு மேலும்-10; 11; 12; 13; 14. 15. 20: 100; 500: முதலிய இஷ்டப்படி புஜங்கள் (த்ரிகோண புஜங்கள்) அமையலாம். அமைக்கலாம். ஆகையால் இவைகளின் ஸாதனத்துக்குரிய வகுக்குமெண் (120000)க்கு வட்டத்தின் விட்டத்தைப் பெருக்கு மெண்களாகிய குணகங்களைச் சாதனம் செய்யும் வழி:—

பாகைகள் 180°ஐ (நூற்றெண்பதை) வேண்டிய முக்கோண எண்ணால் வகு. ஈவுக்குரிய பாகாதிகளின் புஜஜ்யாவை (SIN) (120000)ஆல் பெருக்கு இதே மேற்கூறியபடி குணகமாகிய பெருக்கு மெண்ணாம்:

உதாரணமிங்கு:—

(முன்னுறையில் கொடுக்கப்பட்டுள்ள மேத மேடிகல் டேபில்படிக்கமைந்த ஜ்யா இங்கு வேண்டும்.)

த்ரியச்ரம் (புஜம்) 9க்கு:—

$\frac{180^\circ}{9^4}$ = 20°க்கு ஜ்யா (ஸைன்) = 0·342 இதை (120000) ஆல் பெருக்கியது (ஒன்பது புஜகுணகம்) = (120000 × 0·342) = 41040 முன் சொன்ன குணகம் = 41031, இவ்விரண்டின் வித்யாஸம் = 9.

த்ர்யச்ரம் 4க்கு உதாரணம்:

$\frac{180^\circ}{4^4}$ = 45° ஸைன் (ஜ்யா) = 0·7071 இதை (120000)ல் குணிக்க = (0·7071 × 120000) இதல் = 84852, முன் சொன்னது 84853, வித்யாசம் = 1.

இவ்விதமே மற்ற குணகஸாதனமும்:

த்ரியச்ரம் (த்ரிபுஜம் = த்ரிகோணம்) 45 ஆனால் அப்போகுணகங் கணிக்க:—

$\left(\frac{180^\circ}{45}\right)$ = 4° க்கு (ஷை டேபிலில் பார்க்க) ஜ்யா (ஸைன்) = 0·0698 இதை (120000)ல் பெருக்கியதுகை = (.0698 × 120000) = 8376. என்பதாகும்.

மற்றும் வருவன வெல்லாமிப் படிப்பார்த்துக் கொள்ள வேண்டியது என்பதை அவசிய முணர்க—

**ஸூக்ஷ்மஜ்யா ஸாதனத்துக்கு முன் ஸ்தூலஸாதனத்தின் பொருட்டு:—**
**ஸ்தூலமாய்ஜ்யா (ஸைன்) SIN கணிக்கப் போது வழியிங்கு:—**

(இஷ்டசாபம் 1° முதல் 90° வரையில் கொண்டும், அரைவட்டம் (பரிதி) 180°ம்-கொண்டாலப்போது இஷ்டபாகை 45° க்கு (ஸைன்) ஜ்யா கணிக்கவேணு மென்றால் (இவ்வேலைகள் தசாம் சவிதத்தில் சுகமாக முடியுமாதலால், அம்முறைப்படி.)

$$\left\{\begin{matrix}\text{இஷ்டசாப ஜ்யா} \\ =(\text{ஸைன்})\end{matrix}\right\} = \left\{\frac{(4\ \text{விட்டம்})\ (\text{பரிதி} - \text{சாபம்})\ (\text{சாபம்})}{\frac{5}{4}(\text{பரிதி})^2 - (\text{பரிதி} - \text{சாப})\ (\text{சாபம்})}\right\}$$

இங்கு பரிதி = 180° ஆகையால் ஷைக்குச்

$$= \left\{\frac{(4\ \text{விட்டம்})\ (180 - \text{சாபம்})\ (\text{சாபம்})}{(\frac{5}{4} \times 32400 = 40500) - (180 - \text{சாபம்})\ (\text{சாபம்})}\right\}$$

இதற்கு உதாஹரணமிங்கு:—

பரிதி = 180°, (இஷ்டசாபம் = இஷ்டபாகை 45°)க்கு ஜ்யா கணிக்கும் உதாரணமிங்கு:—

180°ல் 45° ஐக்கழித்த மிச்சம் = 135°, இதை 45°ல் பெருக்க—6075; இதை 4ல் பெருக்க = **24300.** என்று நிறுத்திவிட்டு.

பின்பு:—

ஷை 6075ஐ, 40500ல் கழித்த மிகுதி = 34425. இதற்கு முன்னிருத்திய 24300 ஐக்குடுத்த ஈவு = **0·7059.** என்று வந்தது. இந்த இஷ்ட சாபம் 45° பாகைக்கு முன்னுறையிலுள்ள மேத மேடிகல் டேபிலைப் பார்க்க **ஸைன்** (ஜ்யா) = **0·7071.** இவ்விரண்டின் வித்யாஸம் 0·0012.
ஷை 0·7071ஐக் கணிக்க த்ரிகோணமிதி ஜ்யாஸாதனம் இனி கூறுவதைப் பார்க்கவும்:—

இந்த முன்னுறையில் கண்ட ஸூக்ஷ்மஜ்யா ஸாதனஞ்செய்ய முன்னே சில உபகரணங்கள் வேண்டியது.

{[ஷை45° ம் பாகைக்கு மாத்திரம் ஜ்யாஸாதனஞ் செய்ய வேண்டுமானால்:—
ஜ்யா (SIN) 45° = $\sqrt{\frac{1}{2}} = \sqrt{(0\cdot50)}$ = 0·707107 என்பது.]}

அவைகளின் விவரணமிங்கு:—

சுத்தமான முறைப்படி ஏற்பட்டவைகளாகிய:—

உபவிகலை ($1'''$) க்கு புஜஜ்யா (SIN) = { [சாபம் = $(\pi \div 180^{\circ} \times 60^{3})$ ரு = 0·0000000808022802.........] 0·0000000808022802.......... }

ஷை ரு கோடிஜ்யா = (COSIN) } = 0.9999999 9999999 67355.........

விகலை ($1''$) க்கு புஜஜ்யா (SIN) { { சாபம் = $(\pi \div 180^{\circ} \times 60^{2})$ = 0·00000 48481368111......... } ஜ்யா = 0.0000048481368109......... }

ஷை ரு கோடிஜ்யா = (COSIN) } = 0·99999 99999 88247785.........

கலை ($1'$) க்குறிய புஜஜ்யா (SIN) { { சாபம் = $(\pi \div 180^{\circ} \times 60)$ = 0·0002908882086657......... } ஜ்யா = 0·0002908882045634............... }

ஷை கோடிஜ்யா = (COSIN) } = 0·99999995769202532 8...........

{ ஓர் பாகை ($1^{\circ}$)க் குறியவை யாகிய (சாபம் = வட்டம்) } = $\left\{ \frac{\pi}{180^{\circ}} \right\}$ = $\left\{ \frac{3 \cdot 1415926535897932}{180^{\circ}} \right\}$

= 0·0174532925199432 9 $\frac{10}{18}$ = 0·01745329252;

(புஜஜ்யா = SIN) = 0·0174524.........

(கோடிஜ்யா = COSIN) = 0·9999999.......=(-1-)

$\pi$ = 3·1415926535897932

$90^{\circ}$ (பாகை) ரு { சாபம் = 1·5707963267948966............ புஜஜ்யா = 1; கோடிஜ்யா = 0; }

---

(வேறு)




(படம் = 45)

[படம் (—45)]ஐக் கவனி

(புஜம் = 3)

(இ. பு = இஷ்ட புஜங்கள்) ∴

வட்டஒர ஸமபுஜ நீள = ஜ்யா $\left(\frac{180}{\text{இ. பு.}}\right)$([விட்டம்]=[2 அரைவிட்டம்]) ∴

இதற்கிஷ்டத்ரிபுஜ = 3பு

∴ (180 ÷ 3பு) = 60°;

(ஜ்யா 60°) = **0.866**

∴ (0.866 × 60 × 2) = 103.92

∴ க = ங = ச = **103.92** ∴

(மேல் வரும் க்ஷேத்ரங்கட்கு மிவ்விதமே கணிக்குக) : —

இஷ்ட புஜங்களை (AB = க), (BC = ங), (CA = ச)

ஆ புஜங்கள் 3ரும் = (3பு) எனக் கொண்டதாம் : —




**(படம் 45)ஐக் கவனி**

வட்டத்துள்ளடங்கிய நாலு புஜம் (அல்லது இருபுஜம்)

$$\left\{\frac{180^\circ}{4\text{பு}}\right\} = \mathbf{45^\circ};$$

(45° ஜ்யா) = 0.7071

புஜம் = (2 அல்லது 4) (.7071 × 102)

= (72.1242)' = (AB)'

(இங்கு இஷ்ட த்ரிபுஜங்கள் 4.

∴ 180ஐ 4ல் வகுக்க 45° வந்தது. மற்ற விவரம் மேல் நோக்குக)

(உள்நோக்கும் பார்வையால் விட்ட அளவில் இருத்ரிபுஜங்களுமுள்ளதைக் வனிக்குக); <u>(மேல் நோக்கால் நான்காம்)</u>

AB = ங,
BC = க,
CD = ஞ,
DA = ச,

∴ (க = ங = ச = ஞ) ஆனபடியாலிங்கு ஷை 72·1242ரு = (க = ங = ச = ஞ) என்ற புஜங்கள் ஸமத்வமாயின :—

மற்றும் வருவன வெல்லா வற்றிற்கும் முன் [படம் 45 (−45)] க்குச் சொன்னதையும் இங்கு சொன்னதையும் நன்கு கவனித்துக் கொள்க:—

---

(புஜம் 5) = $5^4$




(படம் 46)ஐக் கவனி.

$$\left(\frac{180^\circ}{5^4}\right) = 36^\circ;$$ (36° ஜ்யா) = 0·5878

(·5878 × 112) = (65·8336) = க = ங = ச = ஞ = ட

(இங்கிஷ்ட த்ரிபுஜங்கள் 5 ∴ 180°ஐ 5ல் வகுக்க 36° வந்தது) மற்ற விவரம் மேல் பார்க்குக.

---

(புஜம் = 6) ரு′ = $6^4$




(படம் 47)ஐக் கவனி.

இஷ்டத்ரிபுஜம் 6 ∴ 180°ஐ 6ல் வகுக்க ஈவு 30° மற்ற விமாம் கீழ் நோக்குக)

$\left(\frac{180°}{6^4}\right)$ 6 = 30°; (30° ஜ்யா) = (0·5000) (0·5 × 112)

= (56·0) = க = ங = ச = ஞ = ட = ண.

———

(புஜ = 7) ரு = $7^4$



(படம் 48)ஐக் கவனி.

இஷ்டத்ரிபுஜமிதற்கு 7 ∴ 180°ஐ 7ல் வகுத்த ஈவு $(25\frac{5}{7})°$ = 25° 43′

∴ $\left\{\frac{180°}{7^4}\right\}$ = $25\frac{5}{7}°$; ($25\frac{5}{7}°$ = 25° 43′) ஜ்யா = 0·434 . . . .

(·434 × 112) = (48·608)

∴ க = ங = ச = ஞ = ட = ண = த = 48·6.

———

(புஜம் = 8) ரு = $8^4$



(படம் 49)ஐக் கவனி.

இதற்இஷ்ட த்ரிபுஜம் 8

∴ 180°ஐ 8ல் வகுத்த ஈவு = $22\frac{1}{2}°$

$\therefore\left(\frac{180^\circ}{8^{4}}\right) = 22\frac{1}{2}^{c}$; ($22\frac{1}{2}^\circ$ ஜ்யா) = 0·3827

(·3827 × 114) = (43·6278)

∴ (க = ங = ச = ஞ = ட = ண த = ந):—

(புஜம் = 9)ஞு = $9^{4}$



(படம் = 50)

(படம் **50**)ஐக் கவனி-

இவற்கிஷ்டத்ரி புஜம் = 9

∴ 180°ஐ 9ஆல் வகுத்த ஈவு 20°,

$\therefore\left(\frac{180}{9^{4}}\right)^\circ = \mathbf{20^\circ}$.

(20° ஜ்யா) = 0·342

(0·342 × 114) = **38·988′** = {(க = ங = ச = ஞ = ட = ண = த = ந = ப)

(புஜம் = **10**)ஞு



(படம் = 51)

(படம் **51**)ஐக் கவனி.

இதற்கிஷ்டத்ரி புஜ = ($10^{4}$) ∴ $\left\{\frac{180^\circ}{10^{4}}\right\}$ = **18°** ∴

(18° ஜ்யா) = (0·309);

(·309 × 60 × 2) = **37·08**

∴ க = ங = ச = ஞ = ட = ண = த = ந = ப = ம = **37·08**;

(இங்கு இஷ்ட புஜம் = **11**) ரு = **11**ᐤ



(படம் **52**)ஐக் கவனி.

இகிஷ்டத்ரி புஜ = 11ᐤ; ∴ $\left\{\frac{180°}{11^4 = 11}\right\} = \left(6\frac{6}{11} = 16°32'\frac{8}{11}\right)$

$\left\{\left(\text{ஜ்யா } 16°33' \text{ரு}\right) = \left(0{\cdot}2848\right)\right\} \left(60 \times 2\right)$

= 34·176 ∴ க = ங = ச = ஞ = ட = ண = த = ந = ப = ம = ய = **34·176** ஆகும்.

---

(புஜம் = **12**) = **12**ᐤ



(படம் **53**)ஐக் கவனி.

இதற்கிஷ்டதிரி புஜம் = 12ᐤ

$\therefore \left(\frac{180°}{12^4}\right) = \mathbf{15°}$

$\therefore \left\{\left(\text{ஜ்யா } 15° = 0{\cdot}2588\right)\left(60 \times 2\right)\right\} = \mathbf{31{\cdot}056}$

∴ புஜங்கள் = க = ங = ச = ஞ = ட = ண = த = ந = ப = ம = ய = ர = **31·056 ;**

(மற்றும் வந்தவைகட்கு இவ்விதமேகண்டு கொள்க)

விசேஷக்குறிப்பு:— இவ்வட்டத்தையும் இதைச் சார்ந்துள்ள புஜரேகைகளையும் நன்குற்று நோக்க ஏற்படுவது :—

வட்டத்தின் சுமார் நூறிலோர் பங்கு ($\frac{1}{100}$) பார்வைக்கு வக்ரமில்லாத நேர் ரேகையாகவே இருக்கும்.

ஆகையால் முதியோர்களும், வட்டத்தின் தொண்ணூற்றாறிலோர் பங்கு (அதாவது $\frac{1}{96}$) கேவலம் சீட்ச்சி (நீண்ட)ஸரல ரேகையாகவே தெரியும் என்கிறார்கள்:—

இதற்கு மேற்கோள் :—

["வ்ருத்தஸ்ய ஷண்ணவத்யம் ச: தண்ட வத்ருச்ய தே து ஸ:"]

எனச்சூரியன், பிர்ம்மா, வ்யாஸர், காசிபர் முதலியோர்களின் வாக்யமுமாம்:—

இவ்விதம் வட்ட ஓரபுஜங்கள் எவ்வளவுக் கெவ்வளவு அதிகம் ஆகுமோ அவ்வளவுக் கவ்வளவு வட்டச் சமீபத்திலேயே ஆகும். எண்ணிலா புஜங்களாகில் இவைகள் வட்ட ரேகையிலேயே வித்யாஸமின்றி (வட்ட ரேகையாகவே) உருவம் உள்ளதாகும். ஆகையால் இவ்வித வெகு புஜங்கட்கும் வட்டத்துக்கும் வித்யாஸமே இல்லை. (இவ்வனந்த) இவ்வித வெகுபுஜக் காரணங்களைக்கொண்டே (த்ரிகோண மிதி விகிதப்படிக்கும் $\left(\pi = \frac{\text{வட்டம்}}{\text{விட்டம்}}\right)$ க்குச்சம எண்களின் = ($\pi = 3{\cdot}1415926535897932 \cdots \rightarrow$ ) என்பது மேற்படுகின்றதைக் கவனிக்குக:—

இங்கு படம் 54, 55 று விவரணம்:—







(படம் **54, 55**)ஐக் கவனி.

(BC) என்கிற நாண் நீளம் = **32,**

(இங்கு BC என்கிற வில் நீளம் தெரிய வேண்டிய அவசியமுமில்லை.)

ஷை (BC) வில் நாண்களாக அமைந்த ஓர் ஸமவட்டத்துண்ட க்ஷேத்ரத்தின் விசாலக்குழி (பரப்பளவு) என்ன:—

என்றால் இங்கு BC வில்கேந்த்ர வட்டத்துண்டப் பரப்பளவு தெரிய வேண்டியது அவசியமாகின்றது.

சுத்தமாக இதைக் கணனம் செய்யும்வழி:—

முதலில் BCவில் நாண் வட்டத்துண்டத்திலிருந்து (⊙ ABSOCDL) என்ற வட்டமும், இதனுடைய விட்டமும் (மய்யமும்) தயார் செய்துகொண்டு பின்பு இவைகளில் இருந்து க்ஷே BC க்ஷேத்ர விசாலங்கணிக்கவேண்டியது.

இதற்குவிவரம்:—

இனி சொல்லப் புகுவதற்கெல்லாம் படம் 54லிலிருந்தும் இதனால் ஏற்பட்ட படம் 55லிருந்தும் ஏற்படும் உருவம் எழுத்தடையாளம் இவைகளை எல்லாம் நன்கு கவனிக்குக:—

முதலில் BC என்ற நாண் (நேர்) ரேகையைப் பாதிசெய்: அதனால் (K) என்ற BCன்பாதி (KB = KC) என்று வரும் இந்த. (K) என்கிற ஸ்தானத்தில் உள் நோக்கி நேர்லம்பமாக (90°ல்) இருக்கும்படி நீண்ட கோடொன்றிழு.

பின்பு உன்னிஷ்டப்படி தெரிந்த அந்த BC வட்டத்துண்டதுள் (SO) என்ற கோடுவரை. இதையும் பாதிசெய்ய (ST=TO) என்ற (SO)வின் பாதி நீளம் வரும். இதிலும் முன்போல் (T) என்ற ஸ்தானத்தில் நேர் செங்குத்துக்கோடு (90ல் லம்பமாகும்படி) முன்செங்குத்துக் கோட்டைத்தாண்டும்வரையிலிழு.

இவ்விதமிருகோடுகளுமிழுத்ததால் இவ்விருகோடுகளும் ஒரிடத்தில் சம்பந்தித்தேதீரும். இப்படிச்சம்பந்தமிடத்திற்கே (E) என்ற மய்யம் (அதாவது BC என்கிற வட்டத்துண்டத்துக்குறிய ஸம்பூர்ண வட்டத்துடைய நடு மய்யம் = மத்தியம்) அவசியமேற்படும்.

பிறகு (EB = ES = EO = EC) என்றபடி அந்தச்சம்பூர்ண வட்டத்தினுடைய அறைவிட்டம் வரும். பின்பு க்ஷே (½விட்ட) வியாஸார்த்தப்படி கைவாரத்தால் (பப்பாஸினால்) ⊙BSOCDLAB என்ற ஸம்பூர்ண வட்டம் வரைக. [இதைச் சுகத்தின் பொருட்டு இஷ்டப்படி (AD) வியாஸார்த்தமுள்ள அறை வட்டமாகவுஞ் செய்துகொள்ளலாம்.] இங்கு AE=ED. என்பது.

AD = வட்டத்தின்விட்டம், (ED = EA) = அறைவிட்டமுமாகும்.

(பின்பு = AE = EB = ES = EO = EC = ED) இவைகள் யாவும் வியாஸார்த்தமென்கிற அறைவிட்டத்துக்குச் சமத்வமாகவே ஆவது. படம் 55-ல், ஏற்பட்டபடி கவனிக்குக.—

பிறகு (BC⌓) என்ற வட்டத்துண்டமான வில் நாண் க்ஷேத்ருந்தர்க்கதமாகியக்குழியை (பரப்பை = இஷ்டவட்டத்துண்டத்தின் விசாலத்தை)க் கணிக்க:—

BC என்ற நாணை AD என்ற விட்டத்தால் வகு. வருமீவேஜ்யா (ஸைன்)-(அறைவிட்டம் 1 என்றபடிக் கேற்பட்ட அளவில்), இதனால் ஜ்யாதி (ஸைன் முதலிய) பதகப்படி (TABLES) ஜ்யா சாபம் அல்லது கோணம் தெரிந்துகொள்க. இப்படி வந்தஜ்யா கோணத்தின் பாகாதியால் 180° பாகையை வகு. இவ்வீவே BC என்றவில் நாண் போன்ற த்ரிபுஜ (த்ரிகோண) க்ஷேத்ரங்கள் பூர்ண வட்டத்துள்ளடங்கியது அத்தனை; என்பதைக் காட்டும். இதையே (பெருக்குமெண் என்கிற) குணகம் எனக்கொள்.

அறைவிட்டவர்க்கத்தில் (BC)யின் பாதி (KCயின்) வர்க்கத்தைக்கழித்து மூலி இம்மூலமே EKயின் நீளமாகும்.

BCன் பாதியால் ஷை EKஐப் பெருக்கியதை யறுபடி குணகத்தாலும் பெருக்கு இதற்கோ கழியும் விசாலமெனப் பெயர். பின்பு முன் கூறியபடி இதற்கேற்படும் ($\pi R^2$ ஆகிய) இஷ்டப்பூர்ண வட்ட விசாலத்தில் ஷை கழியும் விசாலத்தைக்கழி மிச்சத்தை ஷை குணகத்திறைல் வகு. ஈவே. இஷ்டமாய்த் தெரியவேண்டிய BC என்ற வில் நாண் வட்டத்துண்ட க்ஷேத்ரார்த்தமாகிய பரப்பினளவு; அல்லது விசாலக்குழியாம்.

இதன் ஸ்மீகாணம்:— உதாரணமும்:—

(BC⌓) க்ஷேத்ரவிசாலக்குழி கணிக்கச் சமீகரணம்:—

= (அதாவது பொதுஸூத்திரம்).

BC, SO என்கிற இருநேர்க் கோடுகளின் பாதியால் (K·T) ஸ்தானத்தில் நேர்லம்பமாகச் செங்குத்துக்கோடுகள் (KE, TE) அதாவது ($\angle$CKE, $\angle$OTE) படத்திற் காட்டியபடிக்கும் மேலே பொதுவழியில் கூறிய படிக்கும் நன்கு கவனித்து E மய்ய கேந்திரம் (ஸென்டரல்) ஏற்படுத்திக்கொள்.

பின்பு:—

(EK)ஐ, அளந்துக் கொண்டாலும் நீளமேற்படும். அல்லது

$$(EK) = \sqrt{(ED^2 - KC^2)} = \sqrt{(ED + KC)(ED - KC)}.$$

$BC \times \frac{1}{2} = BK = KC;\ SO \times \frac{1}{2} = ST = TO;\ \frac{1}{2}AD = AE = ED$' என்பவைகளை முன் பொதுவிதியிலேயே கூறப்பட்டிருக்கின்றது.

$$\because\ AE = ED = EC = EO = ES = EB = EA.$$

$$\therefore\ EK = \sqrt{(EC^2 - KC^2)} = \sqrt{(EB^2 - BK^2)}$$

(ஸைன்) ஜ்யா $\angle KEC = \dfrac{KC}{EC} = \dfrac{BK}{EB} = \dfrac{BC}{AD}$.

அல்லது.

[டான்ஜன்ட் = ஸ்பர்சரேகா ($\angle$KEC)] = $\dfrac{KC}{KE}$ என்றுமாகும்.

முக்கியக்குறிப்பு:—

$\angle KEC = \angle E = E^\circ$ என்பதாயுணர் ∴

கு = குணகம் = $\left\{\dfrac{(180)^\circ}{(E)^\circ}\right\}$.

$\left\{\begin{array}{c}-(\text{கழியும் விசாலக்குழி})\\ = (\text{க. வி. குழி})\end{array}\right\} = \left\{\begin{array}{c} = \text{கு} \times \frac{1}{2}\ BC \times KE \\ \dfrac{\text{குணகம்} \times BC \times KE}{2}. \end{array}\right\} = (-\ \text{க. கு}).$

பின்பு:—

$$\left\{\begin{matrix}(\frown BC)\ \text{காணிவில் க்ஷேத்ர} \\ (\text{விசாலக்குழி})\ \text{பரப்பு,}\end{matrix}\right\} = \left\{\frac{\pi (EC)^2 - (\text{க}\cdot\text{கு})}{\text{கு} = \text{குணகம்}}\right\}$$ என்பதாம்.

இதற்கு உதாஹரண மிங்கு:—

($\frown$BC)க் குறிய குழியைக் கணிக்க:—

BC = 32, இதன் பாதி KC = BK = 16,

SO = 24, இதன் பாதி OT = TS = 12,

பின்பு பொதுவிதி ஸூத்ர விதிகளின் படிச் செய்து ஏற்பட்ட:—

($\frown$BC) வில் காண் வட்டத்துண்ட க்ஷேத்ரஸம்பூர்ண ($\odot$ ABSOCDL A) வட்டத்தின் விட்டமாகிய வியாஸம் = AD = 44,

இதன்பாதி AE = ED = $(\frac{1}{2} \times 44) = 22$:—

என்ற உபகாணங்களை முதலில் தெரிந்தகொண்ட பின்பு:—

(SIN) ஜ்யா $\angle\ E^\circ = \frac{32}{44} = \frac{16}{32} = (8 \times \frac{1}{11}) = 0.7273$.

இதற்குறிய கோணம் ஜ்யாபதகப்படி $E^\circ = 46^\circ\ 40' = (46\frac{2}{3})^\circ$

அல்லது $KE = \left\{(22^2 - 16^2)\right\}^{\frac{1}{2}} = (484 - 256)^{\frac{1}{2}} = (228)^{\frac{1}{2}}$

$= \left\{(22+16)(22-16) = (38 \times 6) = (228)\right\}^{\frac{1}{2}} = 15\cdot1$

[ஷை $\sqrt{(228)}$ன் மூலம் = 15·1] என்பதாம்.

(டான்) ஸபர்சரேகா $E^\circ = \left(\frac{16}{15\cdot1}\right) = \frac{160}{151} = 1\cdot06$ ரு

ஸ்பர்சரேகா படம் பார்க்க ஏற்பட்ட தான $E^\circ = 46^\circ\ 40' = (46\frac{2}{3})^\circ$ என்றுமாகும்.

இந்த $\angle E^\circ$ ஸாதனம் இஷ்டம் போல் செய்யலாம்.—

பின்பு:—

$$\left\{\frac{180}{E = 46\frac{2}{3}}\right\}^0 = \left(\frac{180 \times 60}{46 \times 60 + 40}\right) = \left(\frac{10800}{2800}\right) = \frac{108}{28} = \frac{27}{7}$$

$= 3\cdot857\frac{1}{7}$ = கு. குணகம் $= 3\cdot858\frac{1}{7}$ அல்லது 3·8571:—

$$\frac{BC}{2} \times (KC = KB) = \left(\frac{BC \times KE}{2}\right) = \frac{1}{2}\ BC \times KE$$

= (16 × 15.1) = 241·6 ஐ ஷை 3·5871உம் பெருக்கிய

= (241·6 × 3·587.) = (க·கு) = (931·8512)

= கழியும் விசாலக்குழி = க·வி·கு = (க·கு)

முன்சொன்னபடி அரைவிட்டம் 22க்குக்குழி (பரப்பு) = $\pi\ R^2 = 3\cdot1416 \times 22 \times 22 = \mathbf{1520\cdot5344}$.

$(1520 \cdot 5344 - 931 \cdot 8512) = 588 \cdot 6832$. இதே இஷ்டமாகிய ($\frown$ BC) வட்டத்துண்ட க்ஷேத்ரவிசாலக்குழியாம்.

(குழி $\frown$ BC) ரு $= 588 \cdot 6832 = 589$. என்பதுணர்க:—

---

(வேறு) :—

(படம் 56, 56-A)ஐக் கவ்னி




(படம் = 56)




(படம் 56A)

படம் (56), (56A).க்களின் விவரணம்:—

56ம்படம் சதுரக்கூர் க்ஷேத்ரம். இதனடிப்பாகம் சமச்சதுரமு [படம் 56ல் கண்ட ($\square$AECD)ஐ; படம் 56 Aல் ($\square$AECD) என்னும் சதுரமாகவே நினை] ம் நுனியில் புள்ளி உருவமுமாம். ஆகவே இன்னுனிப்புள்ளியும் ஓர் மூலைதான். இவ்விதச் சதுர க்ஷேத்ரமூலை (பிந்துக்கள்) ப்புள்ளிகள் ஐந்து (5) ஆகும்.

இவ்வித க்ஷேத்ர உருவங்களில்:—

$$AD = DC = CE = EA = 6;\ FB = 8;\ \therefore AF = FE = \tfrac{6}{2} = 3.$$

$$\therefore AB = DB = CB = EB = \left\{(FE)^2 + (FB)^2\right\}^{\frac{1}{2}}.$$

$$= (8^2 + 3^2)^{\frac{1}{2}} = (73)^{\frac{1}{2}} = 8 \cdot 544.$$

$$\text{நாலு மேல்தலப்பரப்பு} = 4\left(\frac{AE \times FB}{2}\right) = 2\ AE \times FB$$

$$= (\text{மே.ப}) = 2 \times 6 \times 8 = 96 \ldots\ldots\ldots \quad (1)$$

ஷை நாலு மேல்தலப்பரப்போடு பூமியில் கவிழ்ந்து படிந்திருக்கும் அடிப்பரப்பும் சேர்ந்தால் மொத்தம் (இந்த க்ஷேத்ரத்துக்கு மாத்திரம்) ஐந்தலப்பரப்பாம்.

கணிதத்தால்

இந்த ஐந்தலப்பரப்பு

$$= \left\{4\left(\frac{AE \times FB}{2}\right)\right\}$$

$$+ \left\{\begin{matrix} AE \times AD = AE^2 = EC = CD^2 = DA^2 \\ = (\text{கீ. ப}) \end{matrix}\right\}.$$

ஷை ரு = (மே· ப + கீ· ப). = ($6^2$ + ஷை 96) $= 36 + 96 = 132$.—(2).

குறிப்பு = படம் 56 Aல் கண்ட மத்தியமமான ⊙ இது (AECD □) ன் கர்ப்ப ஸ்தானம். இந்த ⊙ல் இருந்து (படம் 56ல்) கண்ட உச்சிப்புள்ளி Bக்குச் செல்லும் செங்குத்துத்கோடே கற்பச் செங்குத்துக்கோடு (இதற்கு = ⊙B), மற்ற-FB-பக்க மத்திச் செங்குத்துக்கோடு என்பதுணர்க:—

இது ஸமசதுரம் ஆகையால்:—

(ஷை க்ஷேத்திரகனபரிமாணம்) = $\frac{1}{3}$ (செங்குத்துக்கோடு × அகலம் × நீளம்).

என்பது........(3)

ஷை கற்பச்செங்குத்துக்கோடு $=(AB^2 — A⊙^2)^{\frac{1}{2}}$ என்பதாம்:—

(படம் 57, 57-A)ஐக் கவனி.


(படம் = 57)


(கீழ்த்தலப்பரப்புப்பார்வை த்ரிகோணமேக்ஷேத்ரமில்)
(ருடைடணை) = ½ (கங்க்ஷதளங்க ஞோ தெரியவாம்)
(படம் 57A)

படங்கள் (57), (57A)க்களின் விவரணமிங்கே:—

இது "இஷ்டபுஜககூர்" க்ஷேத்ரம்.

இதன்மேல் தலங்களின் பரப்பு=(இ.பு.மே.த.ப) படம் (57.ஐப் போலவும்.

அடித்தலப்பரப்பு = (இ. பு. அ. த. ப.) படம் (57A) ஐப்போலவும் (ஆக இரண்டு தலப்பரப்பும் ஒன்றாகச் சேர்ந்து) இருக்கும். [இத்தவித இஷ்டபுஜ க்ஷேத்ரத்துக்குறிய அடித்தலப்பரப் பின்உருவம் பற்றி படங்கள் (—45 முதல் 53 வரைக்குமுள்ள) முப்புஜாதி பனிரண்டு புஜங்கள் வரையில் உள்ள வட்டத்துள் ளடங்கிய இஷ்டபுஜ க்ஷேத்ர ரூபங்களைப் பார்க்க விவரம் நன்கு விளங்கும்] இதற்கும் நுனியில் (ம) என்கிற ஸ்தானத்தில் புள்ளி உருவ மானமூலை தான். ஆகவே இவ்வித இஷ்டபுஜ க்ஷேத்ரங்களுக்கெல்லாம் ஏற்படும்மூலைகள் (1 + இஷ்ட புஜ ஸங்கிமூலைகள், ஆகிய பிந்துக்களாம்.

(இப்புஜஸந்தி மூலைகளும் இதற்குறிய கர்ப்ப கேந்திரத்திலிருந்தேற்படும் வட்டத்தின் ரேகை மேலேயேதான் இருக்கும்.)

படம் (57, 57A) —ல் இஷ்டபுஜங்கள் (12) என்பதாகும்.

இதைவிட இஷ்டபுஜங்கள் 3 முதல் நம்மிஷ்டப் படிக்கமேதம் ஷை 12க்குப் பதிலாக (வட்டஒர) புஜங்களின் எண்கள் உள்ளனவாக அமைக்கலாம், அவசியம் இவ்விதஉருவங்களுமேற்படக்கூடும்.

கவனிக்கவேண்டிய சில குறிப்புகள்:—

இஷ்ட புஜ எண்களின் = (இ. பு. எ) (1).

(கங = ஙச = சஞ = ஞண) முதலிய (சரி) சமான இஷ்டபுஜ நீள ரேகைகளின் = (இ. பு. நீ) (2).

(மக = மங = மச = மஞ = மண) முதலிய புஜஸந்தி (புஜ ஆதி அல்லது புஜக்கோடி) யிலிருந்து உச்சிப்புள்ளி (ம)வுக்குச்
சாய்ந்திருக்கும் நீளம் (சா. நீ) (3).

மேல் தலப்பரப்பில் இஷ்ட புஜப் பாதியிலிருந்து உச்சிப்புள்ளிக்குச் சாய்ந்த நீளக்கோடு = (மட) = (மே. த. செ. நீ) = மேல்தலச் செங்குத்துக் கோடு நீளம் (3A).

இஷ்ட புஜ நீளப்பாதியின் = $\frac{1}{2}$ (இ. பு. நீ) (4).

இஷ்டபுஜப் பாதியிலிருந்து உச்சிப்புள்ளிக்குச் செல்லும் மேல் தலப்பரப்பில் ஏற்படுங் கோடு நீளம் = (இ. பு. ம. செ. நீ) (5).

(நெம்பர் 3Aம் 5ம்) ஒன்றையே குறிப்பது நன்கு ஏற்படுவதற்காக:—

Oங = Oக = Oச = Oண) முதலிய நீளப்பக்க புஜம் சமானமே.

(கங = ஙச = சஞ = ஞண) முதலியளவும் சமானமே = (இ. பு)

(ஞட = ட·ண) = ($\frac{1}{2}$· இ. பு.) (6).

என்றுமிதற்கு = $\frac{1}{2}$ (ணத = தக = கங = ஙச = சஞ = யர = ரல = லக) முதலியவுமுணர்க.

குறிப்புகள் சில கவனிக்க வேண்டியவைகள்:—

இஷ்டபுஜ எண்களின் = (இ. பு. எ); (கங = ஙச = சஞ = ஞண = ணத = தக) முதலிய (சரி) சமான புஜங்களின் நீளம் = (இ. பு. நீ);

[க்ஷேத்ரக்குழி கனம் முதலிய ஸா(நூ)தன விவரணம்].—

இஷ்ட புஜ உச்சிப்புள்ளி உருவ க்ஷேத்ரத்துக்குறிய:—

[ மேல் (சாய்வு) தலப் பரப்பின் ]

$$= \frac{1}{2} \left[ (\text{சா·நீ})^2 - \left(\frac{\text{இ. பு. நீ}}{2}\right)^2 \right]^{\frac{1}{2}} \times [(\text{இ.பு.நீ})\ (\text{இ.பு.எ})] = (\text{மே.சா.த.ப}) \quad (1)$$

[ இதன் பூமித் தலப் பரப்பின் ]

$$= \frac{1}{2} \left\{ (\text{Oங})^2 - \left(\frac{\text{இ. பு. நீ}}{2}\right)^2 \right\}^{\frac{1}{2}} \times \left\{ \text{இ. பு. எ.} \right\}$$
= (இ. பூ. த. ப) (2).

[இதன் மொத்தத் தலப் பரப்பின்] = [மே. சா. த. ப) + (இ. பூ. த. ப)]...(3).

படம் 57Aல் கண்ட கீழ் தலப்பரப்பின் மத்தியில் உள்ள பிந்து சூசக எழுத்து (O) ஸ்தானம் இஷ்ட புஜ உச்சிப்புள்ளிஉருவக்ஷேத்ர கர்ப்ப (மத்ய) கேந்திர பிந்து (புள்ளி) ஆகும்.

(இந்த கர்ப கேந்திரப் புள்ளியில் இருந்து உச்சிப் புள்ளிக்குச் செல்லும் செங்குத் துயரக் கோடு நீளம்).

$$= (O\ ம) = (கர்ப்ப\ உச்சிக்\ கோடு) = (க'உ)$$

$$= \left\{ (சா.நீ)^2 - (O\ ங)^2 \right\}^{\frac{1}{2}} = (O\ ம) \quad (4).$$

$$(O\ ங = O\ ல = O\ க\ முதலியவின்) = \left\{ (சா.நீ)^2 - (O\ ம)^2 \right\}^{\frac{1}{2}} \quad (5).$$

$$(இதன்\ கன\ பரிமாணம்) = \frac{1}{3} \left\{ (இ.\ பூ.\ த.\ ப)\ (O\ ம) \right\}. \quad (6).$$

என்பதாம்:—

(இதர விதத்தில் எற்படும் சகல சந்தேக நிவாரணத்துக்கும் படம் 57, 57Aஐ நன்கு கவனிக்குக).—

மற்றும்இவ்விதம் வருவனவெல்லாம் இந்தப் படிக்குச் சாதனஞ் செய்துக் கொள்ள வேண்டியதாம்.

விசேஷக் குறிப்புகள்:—

(இ. பு. எ) எவ்வளவுக் கெவ்வளவு அதிகரிக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு (இ. பு. நீ) மிக்சமிக்கக் குறைந்து வக்ராகார ரேகையாகிக் கடைசியில் இது வட்ட ரேகையாக(வட்டமாகவே)யாகும்:— (என்கிற விவாதத்தை நன்கு தெரிந்துகொள்ள வேண்டியதற்காகப் படங்கள் (— 45 முதல் 53 வரையிலுள்ள) முட்புஜாதிப்பன்னிரண்டு புஜங்கள் பரியந்தமுள்ள வட்டத்தைத்தொடும் இஷ்டபுஜாந்தம் அல்லது இஷ்ட புஜாதியுடைய க்ஷேத்ரங்களை நன்கு கவனிக்குக:—)

இவ்விதம் கீழ்த்தலப்பரப்பு மாறுபாடடைவதால் ஸமக்ஷேத்ரவட்டங்களும், மேல்தல ஒரப்பரப்பு மாறுபடுவதால் கூறுருவே க்ஷேத்ரங்களும், எற்படுகின்றன:—

[இவ்வித க்ஷேத்ரங்களை (சமக்ஷேத்ர வட்டத்துக்கு) படம் 1-3-4ம், (கூறுருவை க்ஷேத்ரத்துக்கு) படம் 9ஐயும் பார்க்க நன்கு விளங்கும்]

மேலும் இதைவிட பக்கம்(114ல்) சொன்னபடி இஷ்டபுஜம் 45க்குச் சொன்ன குணகத்தால் வட்டத்துள்ளேற்படும் 45 புஜத்தையும் க்ஷேத்ரம் செய்து பார்த்தால் இதன் வாஸ்தவம் இன்னும் நன்கு விளங்கும்:—

அமித (வெகு அதிகரித்த) த்ரி புஜஸந்திப்பால் வட்டமும் இந்த புஜங்களும் வித்யாஸமே இன்றியிருப்பதும் புலப்படும்:—

இவ்வித க்ஷேத்ரக் கீழ்தலப்பரப்பு கணிக்கும் உதாஹாரணத்தை படம் 55ன் (க. கு. = கழியும் விசாலக்குழி) என்பதைக்கணிக்கும் விவாணத்தில் பார்க்கவும்— மற்றமேல்தலப்பரப்பு கணிக்கும் உதாஹாரணம் படம் **56ன்** **விவாணத்தில்** பார்க்கவும்.—

அதுபோல இதைச் செய்ய வேண்டும் என்பதே யொழிய புஜாதி க்ஷேத்ரக ணிதம் வெகு வித்யாஸம் என்பதையும் மனதில் நிருத்தி **கணி**த வேலை செய்ய விடை சரிவரும்.—

மற்றுமேற்படுவதற்கெல்லாமிவ்விதமே கண்டு கொள்ள வேண்டியதாகும்: என்பதாம்:—

---

(வேறு)

படம் 58, 59, 60 இவைகளின் விளக்கப் பொது விதியிங்கு:—

இவைகளின் ஸாதனத்துக்கு முதன் முதலில் படம் 54, 55ஐயும் இவற்றின் ஸாதகப் பொதுவிதி முதலிய உதாஹரணம் உருவமிவைகளையும் நன்குகவனிக்க:—

இவ்வுரு முதலிய ஸாதகங்களும் ஏற்படும்.

பின்பு:—

இங்கு




(படம் 58)

$$\left\{ \begin{matrix} \frown \text{ABCD என்கிற} \\ \text{க்ஷேத்ர வட்டத்துண்டச்குழி} \end{matrix} \right\} = \left\{ \frown(\text{ABCE குழி}) - (\frown \text{ADCE குழி}) \right\} \quad (1).$$

இச்சமீகாணம் படம் 58ரு ஆகும்.—

---

இங்கு:—




(படம் 59)

{(⬭ABCD என்கிற க்ஷேத்ர வட்டத்துண்டக் குழி ரு)}

= {(⌓ABCE குழி)+(⌓ADCE குழி)} ...... 2.

இச்சமீகரணம் படம் 59ரு ஆகும்.—

எப்போ இப்படத்தில் கண்ட AE = EC, DE = EB என்றுருகுமோ தற்சமயமெல்லாம்.

(க்ஷே⬭ABCD குழிரு).
= (⌓ABCE குழி) × 2 = (2 × ⌓ADCE) என்றுமாம்.

மற்றும்வருவன இவ்விதமே.—

---

இப்போது இங்கு:—

படம் **60**ஐ முதலில் நன்றாகக் கவனிக்க வேண்டும் பின்பு:—




(படம் ௬0)

⊙ ADCREHGO என்கிறது ஸமவட்டமும்,

⊙ ABCKEFGP என்கிறது நீள் (நீண்ட) வட்டமுமாகும்.

இவ்விரு வட்டத்தையும் ஒன்றாய் பதிப்பித்திருக்கின்றதாகப் பாவிக்குக:—

அப்போ.—

படம் (58)ருச் சொன்ன விசாலக் குழி கணிதப்படி இங்கும் கணிக்கப் பட்ட:—
(வெளி வட்டத் துண்ட க்ஷேத்ரக் குழிகளின் சேர்க்கை.)
= (குழி ABCD + குழி CREK + குழி EFGH + குழி GOAP).
என்பதாகும்,—

(மேலுமிவைகட்குட்பட்ட ⊙ABCREFGOA க்ஷேத்ரக் குழிரு)
= (நீள்வட்டக்குழி − GOAP குழி − CREK குழி).∴

(க்ஷே.ருச் சமம் =) =(ஸமவட்டக் குழி − ABCD குழி − EFGH குழி);
...... (3).

என்றுமாகும்.—

∵ (⊙ ADCKEHGPA குழிரு)

= (ஸமவட்டக்குழி + GOAP குழி + CREK குழி)

= {(நீள்வட்டக் குழி) + (ABCD குழி) + (EFGH குழி)} . . . (4).

என்றுமாகும்

மேலுமிதில்:— ஆவது.

(ஷ நேர்ரேகைகளில்):— CG = AE, B के = के F, O के = R के. FH=DB, OP=RK என்பவைகளினுடைய ரேகாஸமத்வங்கள் கவனிக்கத்தக்கது இவ்வித க்ஷேத்ரங்களில் ஷ ஸ்தான ரேகைகள் ஷ காட்டிய ஸமத்வத்துக்கு வெகுவாக வித்யாஸத்திலு மேற்படலாம். அப்போதும் அவ்வித க்ஷேத்ரவிசாலங் கணிக்க மேலே குறிப்பிடப்பட்ட ஸமீகாண வழியே உபயோகமாகும் என்பதின் பொருட்டே அச்சமீகாணங்களையும் இவ்விதமே எழுதப்பட்டது என்பது உணர்க.—

---

இனி வேறு விசேஷ விஷயங்கள்:—

அதாவது 115ம் பக்கத் துடர்ச்சியாகிய கோல கணித ஸம்பந்த மானவைகள்:-—

முதலில் இஷ்டபாகைக்கோ, இஷ்டகலைக்கோ, இஷ்டவிகலைக்கோ, இஷ்ட உப விகலைக்கோ (இ) என்கிற இஷ்டசாபங்கணிக்கவேண்டும். இவ்விஷ்டசாபத்தினல் தான் (SIN) ஸைன் (புஜஜ்யா) கோடிஜ்யா (S )SIN) கோஸைன் முதலியவைகள் கணிக்கமுடியும்). இவைகளைக்கொண்டே ஸ்பரிசரேகைகள் (டான்ஜென்ட்ஸ் = TANGENTS), கோடான்ஜென்ட்ஸ் = COTANGENTS) (ஸ்பக = SECANT), முதலியவுங்கணிக்கவேண்டுமாகையால்:—

(முதலில் அறிய வேண்டிய விஷயங்களாவன):—

கோலம் (வட்டம்) 1க்கு:—

ருசி = 12

| | |
|---|---|
| ருசி 1க்கு.பாகம் = 30° | பாகம் (பாகைகள்) = 360° |
| பாகம் 1க்கு, கலை = 60′ | கலை கலைகள் = 21600.′ |
| கலை 1க்கு, விகலை = 60″ | விகலைகள் = 1296000.″ |
| விகலை 1க்கு, உபகவிகலை = 60‴ | உபவிகலைகள் = 77760000‴. |

கோலத்துக்குறிய வியாஸம் = 1 அரைவியாஸம் = 2; (இங்குவ்யாஸத்தைத் தான் விட்டம் என்னப்படுகின்றது.)

த்ரிகோணமிதிவிகிதகங்களாகிய மேசமேடிகல் டேபில்கள் ( O-°TO-90-°,) அல்லது (-O-′ TO-5400′ அல்லது) (-O″ TO - ?24000″;) (இல்லையேல் (-O-‴TO-19440000-‴)இவ்வளவுவரையில் ஸாதனம் செய்யப்பட்டால்போதும். 360°-, 21600′, 1296000″, 77760000‴- இவைகளடங்கியவட்டம் பூராவும் ஸாதனம் செய்யவேண்டியதில்லை.

ஆகையால்:—

இவைகளின் ஸாதனத்துக்குக் குணகளண்வேண்டும்:— ஆனபடியால் இக் குணகஸாதனம்:—

இஷ்டமாகிய பாகை கலை விகலை உபவிகலைகளை இஷ்டஎண்களாகப்பாவித்தால் முறையே இவைகளின் ஹாரகங்களும் 180° - 10800′- 648000″- 38880000‴— என்பவைகளாம்—

ஆகையால் ப்ரதிஉபவிகலைகளுக்கும் இஷ்டசாபமாகிய (இ‴) கணிக்கவேண்டுமானல் (இஷ்டசாப உபவிகலைகலை இங்கு 0-‴1- ‴2 - ‴3 - ‴4 - ‴5 - ‴6 - ‴7‴ TO 19440000.‴ எனில் இவைகளுக்குச்சமம் இஷ்டஉபவிகலைகள் (இ) என்று கொண்டால்) இப்போ:—

$$(ஜ்யா\,இ'''\,ரு) = (3.1415926535897932) \times \left\{ \frac{\text{இஷ்டஉபகவிகலைகள்} = (I.TO.19440000)'''}{(38880000''')} \right\}$$

என்பதாகும்:— ——(1)

இஷ்ட சாபவிகலைகளுக்கு ஜ்யாதி ஸாதனங்கள் வேண்டின் இவைகட்குச்சமம் = 0″ — 1″ — 2″ — 3″ — 4″ — 5″ — 6″ — 7″ — 8″ — 9″—10″ to 324000″ ஆனல் இவைகளுக்குச் சமம் இஷ்டவிகலைகள் (இ) எனக் கொண்டால் இப்போது கணிக்க வேண்டிய.

$$(இ''\cdot ரு) = (3\cdot 1415926535897932) \left\{ \frac{(\text{இஷ்டவிகலைகள்}) = (1\text{-T }0\text{-}324000)''}{(648000'')} \right\}$$

என்பது.— ——(2)

இஷ்ட சாபகலைகளுக்கு ஜ்யா (இ) வேண்டியவை களாகில்:

0′ — 1′ — 2′ — 3′ — 4′ — 5′ — 6′ — 7′ — 8′ — 9′ — 10′ to 5400′ இவைகளை இஷ்ட கலைகளாகக் கொண்டால் தற்சமய மெல்லாம்கணிக்க வேண்டிய வைகளாகிய

$$(இ'.ரு) = (3.1415926535897932) \left\{ \frac{(\text{இஷ்டகலைகள்}) = (I\text{-TO-}5400'}{(10800')} \right\}$$

என்பது ——(3)

இஷ்டபாகைகளுக்கோ ஜ்யா (இ) வேண்டியதாகில்:— இங்கிஷ்டபாகைகளின் = 0° — 1° — 2° — 3° — 4° — 5° — 6° — 7° — 8° — 9° — 10°— 11° — to 90° ∴

$$\therefore (\text{இ}^\circ\text{-ரு}) = (3.14159265359) \left\{ \frac{\genfrac{}{}{0pt}{}{(\text{இஷ்டபாகைகள்})}{=(1^\circ\text{-TO}-90^\circ)}}{(180^\circ)} \right\}$$

என்பது ——(4)

இவ்விதம் இந்த (இ)கணித்தறிந்தபின்பு:—

$$(1), (\text{புஜஜ்யா}) = \text{இ} - \frac{\text{இ}^3}{\angle 3} + \frac{\text{இ}^5}{\angle 5} - \frac{\text{இ}^7}{\angle 7} + \frac{\text{இ}^9}{\angle 9} - \frac{\text{இ}^{11}}{\angle 11} + \frac{\text{இ}^{13}}{\angle 13} - + - + \rightarrow.$$

$$(2), (\text{கோடிஜ்யா}) = 1 - \frac{\text{இ}^2}{\angle 2} + \frac{\text{இ}^4}{\angle 4} - \frac{\text{இ}^6}{\angle 6} + \frac{\text{இ}^8}{\angle 8} - \frac{\text{இ}^{10}}{\angle 10} + \frac{\text{இ}^{12}}{\angle 12} - + - + \rightarrow$$

குறிப்பு:— ஷை $\because \angle 5 = 1 \times 2 \times 3 \times 4 \times 5 = 120.$
ஷை $\because \angle 6 = 1 \times 2 \times 3 \times 4 \times 5 \times 6 = 720.$

(மேன் மேலும் இவ்விதமே):—

என்பதாயுணர்க.—

$(-+\rightarrow.)$ முதலியவிகிதங்கள் 15,17,19,21,23, (14, 16, 18, 20, 22, 24,) இன்னும் மேன்மேலும் (இ) இதேகதியில் முடிவின்றி அமிதமாய்க்கணிக்க வேண்டியதைக்குறிக்கும். நமக்கு வேண்டியவரையில் கணித்துக்கொள்க:—

இவ்விதம் ஜ்யா கோஜ்யாக்கள் இஷ்டராசி பாக கலா விகலா பவிகலாதிகட்கு த்தெரிந்தபின்பு:—

(இங்கு அரைவிட்டம்) = (த்ரிஜ்யா = 1) = ஒன்று, எனக் கொண்டிருப்பதனல்.

$$\text{ஸ்பரிசரேகை} = \frac{\text{புஜஜ்யா}}{\text{கோடிஜ்யா}}; \quad (3)$$

$$\text{கோடிஸ்பரிசரேகைக்குச்} = \frac{\text{கோடிஜ்யா}}{\text{புஜஜ்யா}}; \quad (4)$$

$$\text{ஸ்பரிசகர்ணம்} = \frac{1}{\text{கோடிஜ்யா}}; \quad (5)$$

$$\text{கோடிஸ்பர்சகர்ணம்} = \frac{1}{\text{புஜஜ்யா}}; \quad (6)$$

வ்யுத்க்ரமஜ்யா = (1 — கோடிஜயா),

90° பாகைக்கு மேல் 180° பாகை வரையில்:—

வயுத்க்ரமஜயா = [ (1) + ஜ்யா (புஜசாபம் — 90°) ] (7)

கோடிவ்யுத்க்ரமஜ்யா = (1 — புஜஜ்யா); (8)

$$\text{ஜ்யோஜ்யாகர்ணம்} = \text{கார்டு} = (\text{CHORDS}) = \sqrt{(1 + \text{வ்யுஜ்யா}^2)} \quad (9)$$

(வ்யுஜ்யா = வ்யுத்க்ரமஜ்யா = உஜ்யா) என்றுஞ் சொல்வார்கள.

மேலே சொல்லப்பட்ட புஜஜ்யா ஸாதனத்துக்குச் சுலபமான மற்றோர் வழியுமுண்டு:—

ஜ்யாஸாதனம் இஷ்ட பாகைகளுக்கானல்:—

$90^0$ம் பாகஜ்யா = (த்ரிஜ்யா)வின் முதல் ஜ்யாவை ரட்டித்தது சேத்யகம்.

இதை எந்த இஷ்டபாகத்துக்குஜ்யா வேண்டுமோ இதன் முன்பாகஜ்யாவால் குணி; த்ரிஜ்யாவால்வகு, ஈவில் குணித்தஜ்யாவின் முன்பாகஜ்யாவைக்கழி. மிச்சமே இஷ்டபாகஜ்யா–ஆகும்:—

[(த்ரிஜ்யா எனறுல் த்ரிருசிஜ்யா என்பது) பூர்விகர்கள் த்ரிஜ்யாவை 3438′ என்கிறார்கள், சுலபத்துக்கு நவீனர்கள் த்ரிஜ்யா = 1 எனக்கொண்டார்கள். இதை அனுசரித்தே முன்னுரையிலும், ஜ்யாதிகளின் விகிதம் பதகம் தயார் செய்யப்பட்டிருக்கிறது] :—

இதற்கு உதாரணம்:—

சேத்யகம் = $2 \times \sqrt{(1 - 0{\cdot}01745 \times 0{\cdot}01745)}$ ப்ரதிபாகஜ்யா ஸாதனஞ் செய்ய:—

ஷி ரு = $(0{\cdot}9998 \times 2) = (1{\cdot}9996)$ = சேதயகம்.

ஜ்யா $2^0$ ரு = (சேத்யகம் × ஜ்யா i ÷ 1) – (ஜ்யா $1^0$) ரு.

$= (1{\cdot}9996 \times {\cdot}01745 \div 1 - {\cdot}0000) = {\cdot}0349 =$ (SIN $2^0$)

ஜ்யா $3^0$ ரு = (சேத்யகம் × ஜ்யா $2^0$ ÷ 1) – (ஜ்யா $1^0$) ரு

$= (1{\cdot}9996 \times {\cdot}0349 \div 1) - ({\cdot}01745) =$ SIN $3^0$. $= {\cdot}05233$.

ஜ்யா $4^0$ ரு (சேத்யகம் × ஜ்யா $3^0$ ÷ 1) – (ஜ்யா $2^0$). ரு

$$=\left(\frac{(1.9996}{1} \times 0{\cdot}05233 - 0.0349\right) = 0.06975 = \text{SIN } 4^0$$

ஜ்யா $5^0$ ரு = [(சேத்யகம் × ஜ்யா $4^0$ ÷ 1.)]ரு.

$=[(1.9996 \times 0.06975 \div 1)-(0.05233)]$ரு

$= 0.08715 =$ SIN $5^0$.

என்றிவ்விதமேஒவ்வோர் பாகைகளுக்கும் சுலபத்தில்ஜ்யாஸாதனம் செய்துகொள்ளலாம்.

இவ்விதம் ஜ்யாக்கள்மாத்திரந் தெரிந்தவிடத்தில் கோடிஜ்யா ஸாதனம் செய்ய.—

கோடிஜ்யா = $\sqrt{[1-(\text{ஜ்யா} \times \text{ஜ்யா})]}$ என்றிப்படிக்கணிக்குக.

இவ்வழிப்படிக்குக் கலாதிகட்கும் ஜ்யாக்கள் ஸாதிக்கவேணுமாகில்;—

89° 59'க்கு (SIN) ஜ்யா = 0·99999996 என்றுவதால் இங்கு இதன்ரட்டி (1·99999992)ப்பே சேத்யாகம். இந்தப்ரதிகலே ஜ்யாஸாதக சேத்யகம் = 1·99999992). இதை சுமாரில் (2) எனக்கொள்ள; பெருக்கி வகுக்கும் எண்கள் அடிபடுவதால் கேவலம் பெருக்கப்படுமெண்ணிரட்டிப்பே நிற்கின்றது.

ஆகையால்:—

$$\left.\begin{array}{l}(\text{ரண்டாம் கலேஜ்யா} \\ = \text{SIN } 2')\end{array}\right\} = \left\{(\text{முதல் கலேஜ்யா} \times 2 - \text{ஜ்யா } 0')\right\}$$

$$(\text{ஜ்யா } 3' \text{ ரு}) = (\text{SIN}3') = \left\{(\text{ஜ்யா } 2' \times 2) - (\text{ஜ்யா}1')\right\}$$

$$(\text{ஜ்ய } 4' = \text{SIN } 4') \text{ ரு} = \left\{(\text{ஜ்யா } 3' \times 2) - (\text{ஜ்யா}2')\right\}$$

[என்றிவ்விதவழியாகும் இதுவும் 7ஸ்தானம் பரியந்தம் வெகுசுத்தம். இதற்கு மேலும், மிகசுத்தஜ்யா வேண்டுமேயாகில், முதல் பாகஜ்யாவை எத்தனை ஸ்தானம் சுத்தமாகக்கணித்து, இதன் கோஜ்யாரட்டிப்பு சேத்யகமும், எத்தனை ஸ்தானம் சுத்தமாக வருகிறதோ அத்தனை ஸ்தானங்களுக்கு கலாதி (அல்லது பாக) ஜ்யாவும் சுத்தமாகவே வரும் என்பதாம் :—

(இவ்விதமே — விகலா — உபவிகலாதி — களின் சுத்த ஜ்யா ஸாதனத்துக்குமாம்).]

என்றிவ்விதமாகையால்:—

ஜ்யா (SIN) வேண்டிய இஷ்டகலே முன் ஜ்யாவைரட்டிப்பதிலிதன் முன் ஜ்யாவைக்கழிக்க இஷ்டகலாதிகட்குரிய ஜ்யா; டெஸிமல் 7-ப்ளைஸ்வரையில் ஸரிவரும். விகலாதிகட்கோ வென்றால் சேத்யசானுஸாரமாக (9, 14-)ப்ளைஸ்வரையில் ஸரிவருமென்பதை முக்கிய அவசியமாயுணர்க:—

இவைகளே இங்கு முக்கிய ப்ரதான வழிகள். (மற்றவை இங்கவ்வளவசியமில்லே. என்பதால் விடுபட்டன)—

இந்தப்படி மேலே கூறிய ப்ராசீனபத்ததி வழிப்ரகாரம் ஏற்பட்ட ஸாரம் யாதெனில்:—

∵ ஓரிஷ்ட சாபாம்ச = A, மற்றோர் சாபம் = B, என்றால் :—

$$\left.\begin{array}{l}\text{ஜ்யா } (A + B) = 2 \text{ ஜ்யா } A. \text{ கோஜ்யா } B - \text{ஜ்யா } (A - B) \\ = \text{SIN } (A + B) = 2 \text{ SIN } \mathbf{A} \times \text{COSIN } \mathbf{B} - \text{SIN } (A - B)\end{array}\right\}$$

என்றதன் விலோமமாகிய, நவீன கணித ஸமீகரணத்துக்கு மூலமாகிய :—

$$\because \text{ஜ்யா } (A + B) = (\text{ஜ்யா } A. \text{ கோஜ்யா } B + \text{கோஜ்யா } A. \text{ ஜ்யா } B) \because$$

[ " சாபயோ ரிஷ்டயோ: " எனக்கீழ்வரும் ]:—

பாஸ்கார சார்ய பத்யாநுஸாரஸூத்ர மேற்பட்டதற்கும் மூலசாரண வழி, இதன் முன் உதாரணத்தில் காட்டப்பட்ட ரிஷகளின் பத்ததி, ஸூத்ரங்சமீகாணங் களேயாகும்; என்பது ஆழ்ந்த யோசனையால் உணரத்தக்கதாகும். வெகுப்புராதீன காலத்திய ஆர்ய பட்டறேவிட்டத்தை (20000) என்றும் இதன் பாதியறை விட்டத்தை (10000) என்றும் கணித சுலபத்தின் பொருட்டுக் கொண்டுள்ளார்.

இவறைப்பின்பற்றியேதான் நவீனரும் அறை விட்டத்தை (10000 = 1) பதிஞயிறத்துக்குபத்தில் ஒன்று எனக் கொண்டது.

இந்த அறைவிட்டம் 1க்குச் சாதனம் செய்த இஷ்டபாகாதி ஜ்யாக்களை இஷ்ட அறைவிட்டத்தின் பரிமாணத்தால் பெருக்கினுல் இஷ்ட வ்யாஸார்ந்த மாகிய அறை விட்டத்துக்குறிய கோலீய (வட்டச்சம்பந்தத்துக்குறிய) ஜ்யாதிகளாகும் :—

உதாரணமாகப் பூர்வீகர் (ஆர்பட்டர் தவிற) அறைவிட்டமாகிய வ்யாஸார்த் தச்சமம் = (3438)' என்று கொண்டிருந்தபடியால் இவர்கள் இஷ்டப்படி 30 பாகைக்கு ஜ்யா, வேணுமானுல் ∵ (SIN 30° × 3438) = 0. 5 × 3438 = 1719' என்பதாகும்.

மேலுமிவர்கள் இஷ்டப்படி, பசண கோல கலைகளின்.

= 21600' ரு = [(3438' × 6. 2832) இதன் கறர் =

= [(3437' — 44'' —48'') [2 × 3·14159265]

இதே எதற்கும் சாஸ்திரத்தை யனுசரித்தது :—என்பதாகும்.

இதற்குப் புறம்பானவைகள் சுலபத்திற்கு சௌகர்யப்படி ஏற்படுத்திக் கொள்ளப் பட்டது என்பது உணர்க :—

LAOORITHms (லாகாரிதுப்ஸ்) தெரிந்தால் இன்னுஞ் சுலபத்தில் ஸகல கணிதங்களையுங் கையானத்தகுமென்பது அவசியமுணர்க.

ஷைக்குச் சரியான விவரணமிங்கு.

இவ்விதம் ப்ராசீன பத்ததிப்படி எற்பட்ட வழியின் ஸாராம்சம் யாதெனில்:—

இஷ்ட இருவித சாபாம்சங்களை முறையே — அ — க — என்று கொள்ள:—

$$\therefore \left\{ \begin{aligned} \text{ஜ்யா} (\text{அ} + \text{க}) &= \frac{\text{ஜ்யா அ.கோஜ்யா க}}{\text{த்ரிஜ்யா}} + \frac{\text{கோஜ்யா அ.ஜ்யா க};}{\text{த்ரிஜ்யா}} \quad (1) \\ \text{ஜ்யா} (\text{அ} - \text{க}) &= \frac{\text{ஜ்யா அ. கோஜ்யா க}}{\text{த்ரிஜ்யா}} - \frac{\text{கோஜ்யா அ.ஜ்யா க};}{\text{த்ரிஜ்யா}} \quad (2) \end{aligned} \right\} \therefore$$

யோகாந்தா ஜ்யா ஸாதனத்திற்கு:—

" சாபயோரிஷ்டயோர்த்தோர்ஜ்யே
மித: கோடிஜ்யகாஹதே "
த்ரிஜ்யா பக்த்தே தயோரைக்யம்
தச்சாபைக்யஸ்ய தோர்ஜ்யகா
சாபாந்தரஸ்ய ஜீவாஸ்யாத்
தயோரந்தரஸம்மிதா " என்கிற

ஸ்ரீபாஸ்கராசார்ய வசனத்துக்கு (1, 2) ஆகிய ஆர்ஷ (ரிஷிகள் ஸம்பந்த) பத்ததிஸமீகாணமே மூலமாகும். இவ்விரண்டையும் ஆதாரமாகக் கொண்டு இவற்றை விலோகணிதப்படி யோகாந்தரஞ் செய்ய:—

(இங்கு த்ரிஜ்யா = 1 ∵) ∴

(3), ஜ்யா (அ + க) + (அ − க) = (2 ஜ்யா அ. கோஜ்யா க) ∴

இதையும் விலோம கணிதத்தால் கீழ் கண்டபடி செய்ய :—

(4), ஜ்யா (அ + க) = 2 ஜ்யா அ. கோஜ்யா க − ஜ்யா (அ − க) ∵

மகரிஷிகளோ த்ரிஜ்யாவை (1க்குப் பதிலாக) 3438', − 10000, − 120, − 3415, − என்றிவ்வித மெல்லாம் கொண்டிருக்கிறபடியால் ·—

(5);-ஜ்யா (அ + க) = $\left\{\frac{\text{2 ஜ்யா அ. கோஜ்ய க}}{\text{த்ரிஜ்யா}}\right\} - \left\{\text{ஜ்யா (அ−க)}\right\}$ இதில்

த்ரிஜ்யாவாகிய (**3438'**-ஏ) ஹாரகமாய மைந்தது. மகர்ஷிகள் வாக்யத்துக்கு:—

(குறிப்பு):— ஆகையால் இவ்வைந்தாம் வழியைவிட கணிதசுலபத்திற்காக —4ம் வழியைக் கொள்ளலாம், இவ்வித மேற்படும் ஜ்யாதிகளை இஷ்டவ்யாஸார்த்தங்களால் (3438, 10000, 1000, 100, 120 − 12 − 3415) (ஸ்ரீபதிஸம்மதவ்யாஸாத்தம் = **3415** என்பது) இவைகளால் பெருக்கிக் கொள்ள இஷ்ட வ்யாஸார்த்த ஜ்யாதிகளாகும்.

பத்யரூப வசநத்துக்கே ஆர்ஷஸமீகரணமாகிய :—

ஜ்யா (அ + க) = $\left\{\frac{\text{2 ஜ்யா அ. கோஜ்யா க}}{\text{(த்ரிஜ்யா)}}\right\} - \left\{\text{ஜ்யா (அ − க)}\right\}$

= $\left\{\frac{\text{(2 கோஜ்யா க × ஜ்யா அ)}}{\text{(த்ரிஜ்யா)}}\left\{\text{ஜ்யா (அ − க)}\right\}\right\}$ இதையே இங்கு (2 கோஜ்யா க) வை "சேத்யக" யாகவும், "ஜ்யா அ" வை இஷ்ட பாகத்தின் முன்பாகஜ்யாகவும்; கழிவு ஜ்யாவாக "ஜ்யா (அ−க)" இதையும், "ஹாரமாக த்ரிஜ்யாவையு" ங்கொண்டு :—

மகர்ஷிகள் ப்ரதிபாக ஜ்யாஸாதநம் செய்தார்கள். என்பதை அவசியம் உணரத்தக்கதாம் :—

மேலுமிவர்கள் இஷ்டப்படி ஏற்பட்ட வ்யாஸார்த்தத்தால் (3438' ஆல்) பகண கோல கலைகளுடைய = (21600)'ரு = (3438' × 6·2832) ஆர்யபடீயப் படிக்கு இதன் மிக்கக்ரூர் ஷே ரு = [(3437' − 44'' − 48''') (6.28318531)] என்பது மவசியம் உணர்க. (மற்ற விவரணம் முன் காண்க).

இந்த விதம் ப்ரதி பாகாதி (ப்ரதி அம்ச கலைவி கலை உபவிகலை முதலினவை களுக்கு ஜ்யாதி ஸாதனம் செய்யும் சுலபப்ரகார) (ஸம்மத)ம் ஆதி ஸித்தாந்த கல்பதரு முக்தாஹாரப் படிக்கேயாகும். :—

18

இதில் ப்ரதி பாகஜ்யா ஸாதகபத்ததியில் சொல்லிய பத்யங்களான:—

"அந்த்ஜ்யா நவதிஜ்யாச த்ரிபஜ்யா த்ரிபமௌர்விகா" விஷ்கம்பாரத்தம் து வ்யாஸார்த்தம் த்ரிஜ்யா நாமாநிசக்ஷதே" (1)"

தந்தேபபாஹுருது (62832) மிநவ்ருத்தே வ்யாஸார்த்தமயுத (100000) ஸங்க்யாஸ்யாத்" சக்ரகலா (21600') ஸமவ்ருத்தே, வ்யாஸார்தம் கஜபுராப்த்தி வஹ்நி (3438') மிதம்" "(2)"

*பரிதே: கார்க்கராமாம் (360°)ச: ஏகாம்சஜ்யார்த்தமுச்யதே"*
*ஏகாம் சஜ்யார்த்தவர்க்கோந த்ரிஜ்யாவர்க்காச் ச யத்பதம்* "(4)'

*ஏகோந நவதிஜ்யாச உபாந்த்யஜ்யா ப்ரகீர்த்திதா"*
*ஏகோந நவதிஜ்யார்த்தம் த்விநிக்கம் (சேத்யகம்) பவேத்* '(4),

*ஏகபாகஜ்யயா நிக்நம் சேத்யம்வ்யாஸார்த்த ஹ்ருத்பலம்"*
*த்விதியபாக ஜீவாஸ்யாத் இத்புக்தம் தத்வவேதிபி:* "(5)"

*த்விதீயபாக ஜீவாக்நே, சேத்யே, வ்யாஸார்த்தஹ்ருத்பலே"*
*ஏகபாகஜ்யயா ஹீநேத்ருதீயாம் சஜ்யகாஸ்ம்ருதா* "(6)"

*த்ருதீயாம்சஜ்யகாநிக்நே சேத்யேவ்யாஸார்த்த ஹ்ருத்பலே"*
*த்விதீயஜ்யார்த்த ஸம்ஹீநே சதுர்த்தாம் சஜ்யகாபவேத்* "(7)"

*சதுர்த்தஜ்யார்த்த நிக்நம் யத் சேத்யம் வ்யாஸார்த்த ஹ்ருத்பலம்"*
*த்ருதீயாம்சஜ்யயாஹீநம் பாணாம் $\left(\frac{0}{5}\right)$ சஜ்யாததாபவேத்* "(8)"

*சராம்ச $\left(\frac{0}{5}\right)$ ஜ்யாதயாநிக்நே சேத்யேவ்யாஸார்த்த ஹ்ருத்பலே"*
*துரீயாம் $\left(\frac{0}{4}\right)$ சஜ்யயாஹீநே ரஸாம் $\left(\frac{0}{6}\right)$ சஜ்யேதிகீர்த்திதா* "(9)"

*ஷடம்சம் சஜ்யாதயாநிக்நம் சேத்யம் வ்யாஸார்த்த ஹ்ருத்பலம்"*
*விஷயாம் $\left(\frac{0}{5}\right)$ சஜ்யயாஹீநம் தத்ஸ்வராம் $\left(\frac{0}{7}\right)$ சஜ்யகாஸ்ம்ருதா* "(10)"

*ஏவம்ஜ்யார்த்தாநிநவதிம் ஸாதயேத்பண்டிதோத்தம"*
*ஜ்யோத்பத்தி: தர்சிதாப்யேவம் கோலவித்பிர்ம்மஹர்ஷிபி:* "11"

*வ்யாஸார்த்தவர்க்காத்பாஹுஜ்யாவர்க்கஹீநாச் சயத்பதம்"*
*கோடிஜீவா தயா ஹீநா த்ரிஜ்யா வ்யுத்க்ரமமௌர்விகா* "12"

*த்ரிஜ்யாஹதாபாஹுஜிவா கோடிமௌர்வ்யாவிபாஜிதா"*
*லப்த்தந்துஸ்பர்சரேகா ஸ்யாதித்புக்த்தம் மாதவாதிபி:* "13"

*வ்யாஸார்த்தக்நீகோடிஜீவா பாஹுமௌர்வ்யாவி பாஜிதா,,,*
*வ்யுத்க்ரமஸ்பர்ச (கோடிஸ்பர்சக) ரேகேதிகீர்த்திதம்மஜ்ஜுளாதிபி:* "14"

*த்ரிஜ்யாவர்க்க: கோடிமௌர்வ்யாபக்த்த: கர்ண இஹோச்யதே "-"*
*த்ரிஜ்யா வர்க்கஸ்து;*

*தோர்ஜ்யாப்த: பவேதுத்க்ரமகர்ணக: (ஸ்யாத்கோடிஸ்பர்சகர்ணக:)* "(15)"

குறிப்பு:— அந்த்யஜ்யா = நவதிஜ்யா = த்ரிபஜ்யா = த்ரிபமௌர்விகா = விஷ்கம்பார்த்தம் = வ்யாஸார்த்தம் = த்ரிஜ்யா என்பதன் வேருபெயர்கள்

மேற்கூறிய (**15**) பத்யங்களின் பொழிப்புறை:—

(பரிதி) வ்ருத்தம் (வட்டம்) = 62832. ஆனால்; (அறை வியாஸம்) (அறைவிட்டம்) = 10000.

பரிதி 21600′ ஆனால் வியாஸப் பாதி = $\frac{1}{2}$ விட்ட = 3438′.

$$\therefore 2\pi = \frac{62832}{10000} = \frac{21600}{3438}$$

∴ (முதல் பாகஜ்யா = (வ்ருத்தஸ்ய சத (**100**) பாகாம்ச: தண்டவத்ருச்ய தே து ஸ:].

(என்கிற (லகதமகர்ஷி) வாக்யப்படி இந்த ஆதி ஸித்தாந்த கல்ப்பதரு முக்த்தா ஹாரப்படிக்கும்) = (ஜ்யா 1°.) ரு = $\left\{\frac{62832}{360^\circ}\right\} = \left\{\frac{21600}{360^\circ}\right\}$

$$= \left\{\frac{175}{10000}\right\} = \left\{\frac{60'}{3438}\right\} \because = \left\{\frac{(62832)}{(360^\circ \times 10000)}\right\}$$

$= \left\{\frac{(21600)}{(360^\circ \times 3438)}\right\}$. முறையே ஆகும்:

இவ்விதமே முதல் பாகஜ்யா ஸாதனமாம்—இதற்கு மேல் பட்ட 2,° 3,° 4,° 5,° முதலிய பாகஜ்யா ஸாதநங்கட்கு பத்யப்படி ஏற்பட்டவைகளை பக்கம் (**138**)ல் காண்க

இப்படியேற்படுவதால் பின்பு வந்த நவீனர்கள் :—

ஓர் பாகைக்குறிய சாபத்தை அல்லது கோணத்தை (க°) என்றும், வேண்டிய ஜ்யா (சாபீய அல்லது கோணீய) பாகங்களின் முன் பாகங்களுக்குறிய எண்களின் இடத்தை (அ°) என்றுங்கொண்டபடியால் :— இவர்கட்கும்:—

இஷ்டபாகங்களுடைய ஜ்யாஸாதநத்தின் பொருட்டு :—

இங்கு இவர்கள் த்ரிஜ்யாவையும் (1 = ஒன்று ஆக மதிப்பதனால்) :—

[ஜ்யா (அ + க)] = [2 கோஜ்யாக + ஜ்யா அ — ஜ்யா (அ — க)]. என்றேற்பட்டது.

இச்சமீகரண கண்டங்களை ஒன்றிலொன்றை மாறி மாறி யோக வியோகங்கள் செய்து நல்லயுக்தியுடையவர்கள் கணிதங்களைக்கணக்கிட த்ரிகோண மிதிகட்கு வேண்டிய (ட்ரிக்னமெட்ரி தியரிகள்) ஸகலஸித்தாந்தங்களுமேற்படுகின்றன. (பரிதி பாகங்களுக்கும் ஸாதனஞ் சேய்ய வேண்டி ஸூக்ஷ்மஜ்யாவிகிதவிதி முன்னுறையில் காண்க) :—

மற்றயவிவாணங்கள் வேண்டியபர்பந்தம் கூடுமானவறையிலும் இதன் முன் பின்ஸந்தர்ப்பங்களில் கூறியவற்றைக்கவனிக்குக :—இவ்விஷிதங்களை ஏனிங்கு கூற

வேண்டுமென்றால் ;—நவீனங்களின் எந்தவித மான கணிதங்களின் உற்பத்திக்கும். மகர்ஷிகள் காலத்திய ஸூத்ர பத்யரூபங்களாயுள்ள கணிதமிதிகளே மூலாதாரம் என்பதைக்காண வேண்டியது யாவரும் என்ற நோகக்கத்தால்:—

என்பது அவசியம் உணர்க:—

எதிலுமின்னும் பலவாறாக விகிதங்களிருந்தாலும் விரிவடையுமென்பதால் சிற்சில விசேஷங்களமைந்த கோட்டுக் கணிதங்களும் இவ்வளவுடனிங்கு முடிவடைந்தன.

---

வேறு :—

விருத்தம்

ஒரு பதினாறினூடே உத்திடுமிருபதுக்கே
வருநிலமென்ன வென்னில்
மருவிய ஒன்றுக் கோர்
வர்கமும் (கோராகவும்) வளுத்து விரே—(46)—

என்பது

கீள் மேல் — ௰௬ (16) று தென்மடல்—

௨௰ (20)று யெத்தனைஎன்னில்—

௰௬ (16)யும் — ய ($\frac{1}{16}$)ல் களிக்க — க (1)-

௨௰ (20)யும் — (ய) $\frac{1}{16}$ல் களிக்க — கவ ($1\frac{1}{4}$)—

ஆகையால் — கவ று (க) ($1\frac{1}{4}$று1) — (ப — ஓ.)

என்பது.

யெதுவுமிப்படிப்பார்த்துச் சொல்லவும்:—

வெண்பா:—

பாராய்கீழ்மேல் பனிரண்டே தென்மடலே
ஓராமல (ல்) நிலமுக்காணியாம்:—
நேராக - வந்தநில முந்திரியாய் மாறுபதினாறினலே
தேரந்த முருகைக்கியந்து சரிகொல்:— (47)—

என்பது:—

கீழ்மேல் - ௰௨ (12)று த்தென்மடலறியாமல் நிலம் சூ ($=\frac{3}{80}$) யானல் தென் ம(வ)டல் சொல்லறியும் வகை:—

முக்காணி (சூ $=\frac{3}{80}$) நிலத்தையும் முந்திரிப்படுத்த - ௰௨ (12)- இதை முந்திரிக் குழி - ௰௬ (16) என்று - ௰௬ (16)ல் மாறாகூ௰௨ ($12\times16=192$); இதை ஒருகைகோல் - ௰௨ (12) ருகிய ஈய்வு - ௰௬ (16) ஆதலால்,
தென்வடல் - ௰௬(16) என்பது:—

விருத்தம்:—

கட்டியோ ரெட்டு மாத்துக் காலரை முக்காலாகும்:—
செட்டியார் செத்துப் போனார் சிறுபிள்ளை மூன்றுபேரும்:—
வெட்டியும்(யோ) பகரொண்ணாது; விலையுமோ குறை யொண்ணாது:—
சட்டியாய்ப்பகரவல்லார் கணக்கர் கோடாலியாமே = (48)

என்பது:—

அ'இ — ச, அ'வ — உ, அ'ஞ — சு = அூ நிறை — மஉ. — = ($8\times\frac{1}{2} = 4$, $8 \times \frac{1}{4} = 2, 8 \times \frac{3}{4} = 6$) = அூ நிறை — 12 —

இதை ங (3) ருக்குடுக்க ஈய்வு — ச —

{ ங வ ஞ — ங ஞ உவ— உ இ — அூ சட்டி (அ)
$3 \times \frac{1}{4} = \frac{3}{4}$ — $3 \times \frac{3}{4} = 2\frac{1}{4}$) — ($2\frac{1}{2}$ — அூ கட்டி = (8) }

ரு நிறை ச - (4) உஞ($2\times\frac{3}{4}$) சஇ ($1\frac{1}{2}$)-2வ ($2 \times \frac{1}{4}$). = இ ($\frac{1}{2}$), உ (2) அூ அ (8) ரு ச (4) ரு ஈனம் (சபடீ) ங (3) ரு நிறை - மஉ (12) சரி:—

குளவெட்ட ளவுக்கு:—

விருத்தம்:—

செப்பிய கீள் மேல் முப்பத்திரண்டு, தென்படலீரெட்டு—
ஒப்புடன் மட்டு முக்காலுக்குப் பணமுறைக்கு வேண்டில்—
தப்பிலாமட்டிலோரதை - தாக்கியோர் கய்யை (கையை) வீசத்
திப்படியாகச் செய்தே யிரண்டையும் மாறிச் சொல்லே = (49)

என்பது: —

கீழ்மேல் - ஙம உ 2(32)ரு தென்மடல் — மசு (16)ரு மட்டு — ஞ($\frac{3}{4}$)ரு யெத்தனை யென்னில்:—

பெருக்காமல் குறுக்குத்தானம் பார்ப்பது :—

ஙமஉ (32)ம் — ய ($\frac{1}{16}$) வீசத்தில் (மாகாணியில்) களிக்க — உ (2); மசு (16) (ம்) யும் மட்டில் கழிக்க — மஉ ($16 \times \frac{3}{4} = 12$) இதை ரெண்டில் மாற — உமச (24ஆதலால் ஷ்ஷ உமச (24) என்பது.

ஆசிருவிருத்தம் :—

கைய(யொ)த்தபிடியி லொருபத்து கொண்ட கோலினிற்
குள்மேநாலுமே — கனிவான — தென்மடல் ஒரு
ஞன்கு மட்டொன்று — கண்டபணை மொன்ருகவே
மெய்த்தபிடி மூன்ஞன்கு ருங்கோலதால் — விரும்பு
கீள்மேலாரதாய் வின்னய தென்மட லீரெட்டிதாய்
மட்டுமேயறை இதற்குவிலையை வைத்தலுறைசெயிற்

